# அன்றும் இன்றும் சிலருக்கு அதே இளந்தளிர் மேனி!




கனிவான பியர்ஸ் சோப்பினால் காத்திடுவீர் உங்கள் மேனி மெருகை, மாணிக்கப் படிகம்போல் மிளிரும் ஒவ்வொரு வில்லையிலும் ஒரு நூறாண்டு கால சோப்-உற்பத்தி அனுபவம் உள்ளிறங்கியுள்ளது. பிஞ்சு மென்மை கொஞ்சும் பியர்ஸ்—தூய்மைக் கொழுந்து—கண்கூடாக நீங்கள் ஊடுருவிப் பார்க்கக்கூடிய உன்னதத் தூய்மை.

**பியர்ஸ் சருமக் களை...**
**கன்னிப் பருவக் களை**

# முதல் பக்கம்

## கண்ணதாசன்

# வானத்து விளக்கு!

"என்னிடம் நீ பத்து ரூபாய் வாங்கினாயா?"

"இல்லவே இல்லை!"

"அப்படி யென்றால் கோவிலில் கற்பூரத்தை ஏற்றுகிறேன். அதை அணைத்துக் காட்டு."

"முடியாது!"

"சத்தியமாவது பண்ணு!"

"முடியாது!"

– கிராமத்து மக்களுக்கு, 'கோர்ட்' ஆண்டவன் சந்நிதானம்'தான். கொடிய திருடனும் அதன் முன்னிலையில் பொய் சொல்ல அஞ்சுவான். தெய்வ நம்பிக்கையால்தான் நமது தாய்மை பிழைத்தது; பெண்மை, கற்பு, நாணயம் எல்லாமே பிழைத்தன.

"முந்தானையைப் போட்டுத் தாண்டு" என்பார்கள். "சாமிக்கு முன்னால் மண்ணை வாரித் தூற்றுகிறேன்" என்பார்கள்; ஒரு காசை இரண்டு துண்டாக வெட்டிப் போட்டு "நீ கேளு காளி ஆத்தா" என்பார்கள். அண்டிமன் எழுதி வாங்கிக் கடன் கொடுத்தவர்கள் கூட அது காலாவதியாகும்போது கோர்ட்டுக்குப் போகாமல் கோவிலில் கட்டித் தொங்க விடுவார்கள்.

கடவுள் வசூல் செய்வான். கடவுள் தண்டிப்பான் என்பது நம்பிக்கை.

கிராமங்களில் ஒரு கதை உண்டு.

ஒரு சமயம் சீதேவியும் மூதேவியும் திருமாலிடம் போனார்களாம். "தங்கள் இருவரில் யார் அழகு?" என்று கேட்டார்களாம். மாலவன் இருவரையும் நடந்து போகச் சொன்னாராம். இருவரும் கொஞ்ச தூரம் போனதும் திரும்பி வரச் சொன்னாராம். ஸ்ரீதேவியைப் பார்த்து, "நீ வரும்போது அழகாய் இருக்கிறாய்" என்றாராம். மூதேவியைப் பார்த்து, "நீ போகும் போது அழகாய் இருக்கிறாய்" என்றாராம்.

இந்தத் தீர்ப்புக்கு அப்பீல் ஏது? கடவுளின் தீர்ப்பு கனிசமானது.

76-ல் ஒரு முதலமைச்சர் மீதும், அவர் மகன் மீதும் விசாரணை. அந்த விசாரணையை யார் ஏற்பாடு செய்தார்களோ அவர்கள் மீதும், அவர்கள் மகன் மீதும் 77-ல் அதே விசாரணை. அங்கேயும் குற்றச்சாட்டு ஊழல்தான்; இங்கேயும் குற்றச்சாட்டு ஊழல்தான்!

வேலை செய்தவர்களில் ஒருவனுக்குக் குறைந்த கூலி கிடைக்கும்; ஒருவனுக்கு அதிகக் கூலி கிடைக்கும். ஆனால் பாவத்துக்கோ அந்த அளவுக்கு மட்டுமே கூலி.

தசரதன் எய்த அம்பால் தன் மகனைப் பிரிந்து வாடிய ஒருவன், தசரதனுக்குக் கொடுத்த சாபம்தானே, 'நீயும் உன் மகனைப் பிரிந்து வாடுவாய்' என்பதும்? இரண்டாயிரம் வருஷங்களுக்குப் பிறகும் இதிகாசம் எதிரொலிக்கிறதே!

சித்தம் பொய் சொன்னாலும் வேதம் பொய் சொல்வதில்லை. சித்தாந்தம் தவறக் கூடும்; வேதாந்தம் தவறாது.

வேதாந்தம் பரசுராமர் காலத்திலும் ஒன்றுதான்; ஆதிசங்கரர் காலத்திலும் ஒன்றுதான்; அச்சுத மேனன் காலத்திலும் ஒன்றுதான்.

நமது மூதாதையர்கள் மாபெரும் மேதைகள். தெய்வ நம்பிக்கையின் மீதே சகல நியாயங்களையும் நிர்மாணம் செய்தார்கள்.

மனிதர்களின் எழுத்துக்களும், கருத்துக்களும் தோற்றுப்போன இடத்தில் தெய்வ நியாயமே தீபம் போல் எரிகிறது.

வெள்ளைக்காரனை நாம் விரட்டியது பாதி தூரம்தான்; மீதி தூரம் அவனை விரட்டியது தெய்வமே!

அன்று பாரதப் போரை முன்னின்று நடத்திய கண்ணன், நமது பாரதப் போரையும் மறைந்து நின்று நடத்தினான்.

தேர்தல் வைப்பதும், வைக்காததும் ஒருவர் கையிலேயே இருந்தபோது, அவர் தேர்தலை நடத்துவானேன்! தோற்றுப் போய் ஒதுங்குவானேன்?

மனிதன் வெளியில் நின்று விளையாடுகிறான்; தெய்வம் மறைந்து நின்று விளையாடுகிறது. தெய்வத்தை நம்புகிறவன் தோற்றாலும் ஜெயிக்கிறான்; நம்பாதவன் ஜெயித்தாலும் தோற்கிறான்.





சாதாரணப் பவுடர்களால் துலக்கும்போது
பிசுக்குகள் பின்தங்கிவிடக் கூடும்.

# மாசில்லாத பளபளப்பை வீசிட வைப்பது விம்.

## இதன் துலக்கும் சக்தி 50% அதிகம்.

துலக்குவதற்கான வேறெந்தப் பவுடரையும் விட மிக அதிக அளவு டிட்டர்ஜெண்ட் அடங்கியது விம். ஆகவே தான், கூடுதலான துலக்கும் சக்தியோடு, பிசுக்குகளையும் கறைகளையும் அற்ப நொடியில் அகற்றுகிறது. பொடிக் கசடுகள் எதும் பின்தங்கும்படி விடுவதில்லை. மேலும், மிக மிக நைசான பவுடராக இருப்பதால், கீறலே இல்லாத மழமழப்புக்கு உறுதி தருகிறது. தொட்டதை யெல்லாம் தூய்மை பளிச்சிடத் துலக்குவது விம்.







இந்தப் பேக்
வாங்கினால் உமக்கு
25% க்கும்
அதிகமாக
மிச்சமாகும்.

இந்துஸ்தான் லீவரின் இந் தரமான தயாரிப்பு 600 கிராம் மற்றும் 2.5 கிலோ பேக்கிங்குகளில் கிடைக்கிறது. உதிரியாக ஒருபோதும் கிடைப்பதில்லை.

லின்டாஸ்-V.55-203 TM

கல்கி
1977 மே 15
பிங்கள ௵
வைகாசி 2

**ராஜாஜி சிந்தனை**

வேதங்கள் நமக்குப் பரம்பரை பரம்பரையாக வந்த சிறந்த சொத்து. நம்முடைய முன்னோர்கள் அந்தச் சொத்தை வெகு ஜாக்கிரதையாகக் காப்பாற்றி நம்மிடம் கொடுத்து விட்டுப் போயிருக்கிறார்கள். அது மிகவும் விலைமதிப்பானது; ஆனால் விற்றால் விலை போகாது. விலை போகவில்லையே என்று நாம் அதை எறிந்துவிட முடியாது. அது எவ்வளவோ கஷ்டங்களுக்கிடையே எப்படியோ பாதுகாக்கப்பட்டு வருகிறது.

வேதங்களைக் கற்பதும் சொல்லிக் கொடுப்பதும் அந்நாளில் மிகவும் கஷ்டமான காரியம்; உற்சாகம் இல்லாத விஷயம். அது மட்டுமல்ல; இதனிடம் விரோதமும் வெறுப்பும் சிலர் கொண்டிருக்கிறார்கள். இவ்வளவு இடைஞ்சல்களுக்கு இடையே யாரேனும் இந்த நல்ல காரியத்தைச் செய்து வருவதைக் கண்டால் நாம் பரம சந்தோஷம் அடைய வேண்டும். வித்தையை ஒருவர் கற்றுவிட்டால் பிறகு அதை மற்றவர்களுக்கு அளித்தால்தான் அவருக்குத் திருப்தி ஏற்படுகிறது. இந்த முறையில் தான் இந்த வேலையைச் சிலர் செய்து வருகிறார்கள்.

வேதத்தைச் சரியான இசையுடன் பயில்கிறவர்கள் அதைப் பிறருக்கும் புகட்ட வேண்டும். அந்த அந்த இடத்தில் இருப்பவர்கள் தினமும் அதிகாலையில் வீதிகளில் அரை மணி நேரம் வேத கோஷம் செய்தால் அந்த அந்த இடங்களில் சாந்தியும் சக்தியும் நிலவி க்ஷேமம் பெருகும்.



**கல்கி சந்தா**

| | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| | ரு.பை | ரு.பை |
| இந்தியா | 38.00 | 19.00 |
| இலங்கை (இலங்கை நாணயப்படி) | 38.00 | 19.00 |
| வெளிநாடுகள் | 90.00 | 45.00 |


வியாபாரிகளே!
விலைவாசியைக் குறைக்க
அரசாங்கத்துடன்
ஒத்துழையுங்கள்!
ஸ்ரீமாய் ஸ்டோர்ஸ்
மளிகை
அரிசி 2.10. 2.40
து.பருப்பு 3.40. 4.15
மிளகு
க.எண்ணெய்
தனியா
வியாபாரிகள்


காங்கிரஸ் தலைவர் பதவி
ரெட்டி
முதல்வர்
பதவியிலிருந்து
வெங்கல்ராவ்
ராஜினாமா


பார்லிமெண்ட்
தேர்தல்
இப்பொழுதும்
மனம்
தளராமல்
சமாளிப்பேன்!
அசெம்பிளி
தேர்தல்

# ஒழுங்கான அரசியல்

கு. சந்தானம்

ஜனதா கட்சி அமைந்துவிட்ட பிறகு இந்திய அரசியல் இப்போதுள்ளதைவிட ஒழுங்காக இருக்கும் என எதிர்பார்க்கலாம். இரண்டு சக்தி வாய்ந்த, ஏறக்குறைய சம பலம் உள்ள கட்சிகள் இருப்பது அரசியல் நோக்கங்களையும் விசுவாசங்களையும் ஓரளவு ஸ்திரப்படுத்தும் என்பது நிச்சயம். ஆனால் அரசியல் துறையில் பழக்க வழக்கங்கள், சம்பிரதாயங்கள் ஆகியன உறுதியாக இல்லாத இந்தியாவில், அரசியல், சரியான பாதையில் தடங்கலின்றிச் செல்லச் சில சட்ட திட்டங்களையும் நாம் ஏற்படுத்த வேண்டும்.

மக்கள் குறிப்பிட்ட அரசியல் கொள்கையைப் பின்பற்றுவதையோ அல்லது அரசியல் கட்சியில் அங்கம் வகிப்பதையோ கட்டுப்படுத்த வேண்டும் என்பதில்லை. ஆனால் கட்சிகளைத் தோற்றுவிப்பதில், இயக்குவதில், அவை அங்கத்தினர் பட்டியலையும், கணக்கு வழக்குகளையும் வைத்துக் கொள்வதில், மேற்கு ஜெர்மனியில் உள்ளது போன்ற சில சட்டங்களை நாமும் இயற்றுவது நல்லது.

கல்கி மலர் 36 இதழ் 42



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற — எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

இன்றுள்ள நிலையில் யாரேனும் மூன்று பேர் மாலை சிற்றுண்டிக்கு அமர்ந்த நிலையில் ஓர் அரசியல் கட்சியைத் தோற்றுவித்து விடலாம். சில நாட்கள் கழித்து அந்த அரசியல் கட்சியை அதே முறையில் கலைத்தும் விடலாம். அரசியல் கட்சிகளை ஆழ்ந்த சிந்தனைக்கும், கலந்தாலோசித்தலுக்கும் பிறகுதான் தோற்றுவிக்க வேண்டும். எனவே, ஒவ்வொரு அரசியல் கட்சியும் குறைந்த பட்ச அங்கத்தினர்களைக் கொண்டு ஆரம்பிக்கப்படுதலும், அக்கட்சி பதிவு செய்யப்படுதலும் அத்தியாவசியம். இந்தியாவில் மாநிலக் கட்சிகள் என்றும் அகில இந்தியக் கட்சிகள் என்றும் இரு விதம் உண்டு. மாநிலக் கட்சிக்குக் குறைந்த பட்சம் பத்துக் கிளைகள், ஒவ்வொரு கிளைக்கும் நூறு அங்கத்தினர்கள், ஆக மொத்தம் குறைந்த பட்சம் ஆயிரம் அங்கத்தினர்கள் இருப்பது அவசியம். அகில இந்தியக் கட்சிக்குப் பத்து மாநிலக் கிளைகளும், ஒவ்வொரு கிளையிலும் குறைந்த பட்சம் ஆயிரம் அங்கத்தினர்களும் இருக்க வேண்டும். இந்தியா போன்ற பெரிய தேசத்தில் ஓர் அகில இந்தியக் கட்சிக்குப் பத்தாயிரம் அங்கத்தினர்கள் இருக்க வேண்டும் என்று எதிர்பார்ப்பது அதிகமல்ல. கட்சியில் ஒருவர் அங்கத்தினராவதற்குச் சில சம்பிரதாயங்கள் ஏற்படுத்துவது நலம். சந்தா செலுத்தியவர்களாகவும் குறைந்த பட்ச வயதுடையவர்களாகவும் இருக்க வேண்டும். அரசியல் கட்சியில் ஒருவர் சேர்ந்த பிறகு அவர் ராஜிநாமாச் செய்வதெனில் ஒரு மாத முன்னறிவிப்புத் தரவேண்டும். ஒரே சமயத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட அரசியல் கட்சியில் ஒருவர் அங்கத்தினராக அனுமதிக்கக் கூடாது. நாடாளுமன்றம் அல்லது மாநில சட்டமன்றத்துக்கு ஒருவரைக் கட்சி வேட்பாளராக நிற்க அனுமதிக்கு முன்னர், அவர் அக்கட்சியில் குறைந்த பட்சம் மூன்று மாதம் அங்கத்தினராக இருந்திருக்கிறாரா என்று பார்க்க வேண்டும். இப்படிச் செய்தால் ஒரு வேட்பாளர் தேர்தலுக்கு நிற்பதை ஏலம் விடுவது போன்ற இன்றைய நிலைக்கு முடிவு கட்டலாம்.

கட்சியின் கிளைகள் எப்படி அமைய வேண்டும், பொதுக் குழு, செயற்குழு ஆகியவற்றின் தன்மை என்ன என்பன பற்றியும் சட்டம் கூற வேண்டும்.

சட்டத்தின் மிக முக்கியமான அம்சம் பணம் சேகரிப்பது, சரியான கணக்கு வழக்கு வைத்துக் கொள்வது ஆகியன பற்றியது. விசேஷ அங்கீகாரம் பெற்றவர்கள்தாம் கட்சியின் சார்பில் பணம் சேகரிக்க அனுமதிக்கப்படலாம். கட்சியின் பெயரால் ரசீது தர வேண்டும்; சேகரிக்கப்பட்ட எல்லாத் தொகையையும் கட்சியின் சட்ட திட்டப்படி பாங்கில் சேர்ப்பிக்க வேண்டும். சென்ற தேர்தலின்போது பல்வேறு கட்சிகள் சார்பிலும் தனி நபர்கள் சார்பிலும் பணம் சேகரிக்கப்பட்டது பற்றிய உண்மை விவரங்களை மட்டும் சேகரிக்க முடியுமானால், அது தொழில் வர்த்தகக்

துறையினரின் பலவீனங்கள் எப்படியெல்லாம் பயன்படுத்திக் கொள்ளப்பட்டன என்பதை அறிவுறுத்தும். பல ரகப்பட்ட மனிதர்கள் பணம் சேகரித்தார்கள். சில சந்தர்ப்பங்களில் அந்தப் பணம் கணக்கில் சேர்க்கப்பட்டது; வேறு பல சந்தர்ப்பங்களில் பணம் சேகரித்தவர் தாமே அதனை அமுக்கிக் கொண்டு விட்டார். சில சாமர்த்தியமான வேட்பாளர்கள் தேர்தலின்போது தங்களுக்கும் தங்கள் குடும்பத்துக்கும் ஒரு கணிசமான தொகையைச் சேகரித்துக் கொண்டிருந்தார்களானால் வியப்பதற்கில்லை. இம் மாதிரி கறுப்புப் பணத்தைக் கட்டுப்பாடின்றிச் சேகரிப்பதே இந்தியாவில் லஞ்ச ஊழலுக்கு மையக் காரணம். இதற்கு எவ்வளவு சீக்கிரம் முடிவு கட்டுகிறோமோ, அவ்வளவுக்குத் தேசம் சுத்தமான அரசியலை அணுகும். பணம் சேகரிப்பது தனி நபர்களுக்காயினும் சரி, கட்சிகளுக்காயினும் சரி, சரிவரக் கணக்கு வைக்கப்பட வேண்டும்.

இத்தகைய ஒரு சட்டத்தை ''இந்தியாவின் ஒழுக்கமான அரசியல் வாழ்க்கைச் சட்டம்'' என்று அழைக்கலாம். இச்சட்டம் கவனிக்க வேண்டிய மற்றொரு முக்கியமான அம்சம் கட்சி மாறுவது பற்றியது. ஒருவர் கட்சியிலிருந்து விலகு முன்னர் குறிப்பிட்ட கால அளவு முன்னறிவிப்புத் தரவேண்டும் என்று ஏற்கனவே கூறினேன். அவர் நாடாளுமன்றத்துக்கோ மாநிலச் சட்டசபைக்கோ அல்லது நகரசபை போன்றவற்றுக்கோ கட்சி சார்பில் தேர்ந்தெடுக்கப் பட்டிருந்தால் அவர் கட்சியிலிருந்து விலகும்போது தமது நாடாளுமன்ற அல்லது மாநில சட்ட மன்ற உறுப்பினர் பதவியையும் துறந்துவிட வேண்டும். கட்சிக் கொறடா கட்டளைப்படியே ஒவ்வொரு அங்கத்தினரும் வோட்டளிக்க வேண்டும் என்று கட்டாயப்படுத்துவது சாத்தியமில்லாது போகலாம். ஆனால் கட்சிக் கொள்கைக்கு விரோதமாகப் போக எண்ணினால் அவர் கட்சியிலிருந்தும் சட்டசபையிலிருந்தும் ராஜிநாமா செய்து விட வேண்டும். சில காலம் பொறுத்து அவர் மீண்டும் சுயேச்சை உறுப்பினராகவோ அல்லது வேறு கட்சி உறுப்பினராகவோ சட்டசபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட பிறகு முன்பு அவர் அங்கம் வகித்த கட்சியை எதிர்த்துப் பேசலாம்.

மேலே விவரிக்கப்பட்டுள்ள அம்சங்கள் அடிப்படையானவை. ஒழுக்கமான அரசியலுக்கு இன்றியமையாதவை. அப்படியிருக்க, இந்திய அரசியல்வாதிகள் ஏன் இந்நாள்வரை இவற்றை ஏற்று அமல் படுத்தவில்லை என்பதே வியப்பாக உள்ளது. சங்கடம் என்னவென்றால் இப்போது நிலவும் குழப்பமான நிலையில் தனக்குக் கிடைக்கக் கூடிய லாபங்களையே ஒவ்வொரு அரசியல் கட்சியும் சிந்திக்கிறது. லோக்பால் – லோக் ஆயுக்த மசோதா இருமுறை நாடாளுமன்றத்தில் கொண்டு வரப்பட்டு, சட்டமாகாமலேயே காலாவதியாக அனுமதிக்கப்பட்டது. லஞ்ச ஊழலை ஒழித்துக் கட்ட லோக்பால், லோக் ஆயுக்த போன்ற ஏதேனும் ஒரு சட்டமும் அரசியல் கட்சிகள் ஒழுங்காக இயங்க இக் கட்டுரையில் விவரிக்கப்பட்டது போன்ற ஒரு சட்டமும் அவசரமாகவும் அவசியமாகவும் இயற்றப்பட வேண்டும். இப்போது கட்சி மாறிகளைச் சேகரித்துக் கொண்டிருக்கும் ஜனதா கட்சிக்குத் தேசப்பற்றும் தீர்க்க தரிசனமும் இருக்கும் என்றும் தாற்காலிக லாபங்களைக் கருதாது, இந்திய அரசியல் தூய்மையாக, இலகுவாக இயங்க மேற் சொன்ன இரு யோசனைகளையும் சட்டமாக்கும் என்றும் எதிர்பார்ப்போம்.

# ராஜாஜி கருத்தரங்கு

**1920**ம் ஆண்டு முதல் ராஜாஜி மறைந்த 1972ம் ஆண்டு வரை அவரோடு மிக நெருங்கிப் பழகியவர் திரு க. சந்தானம். சென்னையில் மே மாதம் இரண்டாம் தேதியன்று ராஜாஜி கருத்தரங்கை அவர் தொடங்கி வைத்துப் பேசியது பொருத்தமானதாகும். அதன் சாரம் வருமாறு:

ராஜாஜி இந்த நூற்றாண்டில் இந்தியாவின் தலைசிறந்த மனிதர்களுள் ஒருவர் என்பதில் ஐயமில்லை. இந்தியாவில் மட்டுமல்ல; இவ்வுலகத்திலேயே உன்னத புருஷர் என்று கூடச் சொல்லலாம். குரு, மகாத்மா என்று காந்திஜி உலகில் உன்னத நிலையை அடைந்திருந்தார் என்பது உண்மை. ஜவாஹர்லால் நேருவும், சர்தார் பட்டேலும் மிகச் சக்தி வாய்ந்த அரசியல்வாதிகளாக இருக்கலாம். என்றாலும், புத்தி நுட்பம், நேர்மை, பிறருக்குப் புரியவைக்கும் திறன், அறிவாற்றல் ஆகியவற்றில் ராஜாஜி நிகரற்றவர். அவருடைய முதல் குறிக்கோள் நியாயம். எந்தக் காரணம் கொண்டும் அவர் நியாயமற்ற காரியங்களுக்கு இடம் தரமாட்டார். நீதிக்கு அடுத்தபடி நேர்மை. அவர் யாரிடமிருந்தும் எந்தத் தருணத்திலும் தம் சுய தேவைக்காகப் பணம் பெற்றுக்கொண்டதில்லை. நெஞ்சுரம் வாய்ந்த ஒழுக்க சீலர். சுதந்திரக் கட்சி தொடங்கியபோது, ''இந்தத் தள்ளாத வயதில் நீங்கள் ஒரு புதிய கட்சியைத் தொடங்க முற்படுவானேன்?'' என்று பலரும் அவரைக் கேட்டனர். ராஜாஜி அவர்கள் யார் பேச்சையும் பொருட்படுத்தவில்லை. 'காலம் உங்களுக்கு என் கருத்தைப் புரிய வைக்கும்' என்றார்.

அவர் சுதந்திரக் கட்சியைத் தொடங்கிய தன் பலனே ஓர் இயக்கமாக உருவாகி, ஜனதாக் கட்சிக்கு வித்திட்டு அதன் இன்றைய வெற்றிக்கு அஸ்திவாரமாகவும் அமைந்துள்ளது. அவர் எந்தக் காலத்திலும் பொய், பித்தலாட்டம் ஆகியவற்றோடு ஒத்துப்போனதில்லை. அவர் எந்தவித சமய சந்தர்ப்பவாதத்துக்கும் துணை நின்றதில்லை. மக்கள் தங்கள் மனச்சாட்சிப்படி உண்மையோடு நடக்கும் மனப்பான்மையை வளர்த்துக் கொள்ள வேண்டும் என்று விரும்பினார். அவரது சிந்தனைகளையும், நோக்கங்களையும் பரப்ப வேண்டியது ராஜாஜி கருத்தரங்கின் மிகவும் முக்கியமான பணியாகும்.

# வடக்கு, தெற்கு, கிழக்கு, மேற்கு

மங்கையர் மனதார விரும்பும் அழகுசாதன க்ரீம்...






## லக்மே வேனிஷிங் க்ரீம்

பாரத நாடெங்கும் அழகு
நங்கையருக்கு ஆதரவு: புது
மலர்ப் பொலிவுக்கு உறுதுணையான
லக்மே வேனிஷிங் க்ரீம்.
இலேசாக இழையும் இயல்பாக.
மேக்கப்புக்கு அதி உன்னதமான
ஆதாரப் பூச்சு!

லக்மே

## லக்மே லவெண்டர் டால்க் "அசல், நற்குபம் பிரெஞ்சு"








கொஞ்சி உறவாடும்
அசல் பிரெஞ்சு
லவெண்டர் பூக்களின்
மணம், நெஞ்சை
விட்டகலாது. பூமணக்கும்
புதுமலர்ச்சி. நாள—
முழுதும் உங்களுக்கே.

daCunha/L-VC/LT/2 Q Tam.



இனிமையான பல ரகங்கள்
எல்லாம் 'டாலரிடமிருந்து' தான்
காலத்திற்கேற்ற
அருஞ்சுவைகள்.
குளூகோஸ், கார்ரா, க்ரீம்,
ஜ". D.B ரவுண்டுகள்.
மேலும் டுட்டி-புட்டி
போன்ற பலவகையான
"பிஸ்கட்டுகள்-
அவைகளுக்கே உரிய,
தனிச்சிறப்பு மணத்துடன்
நீங்கள் விரும்பிச்
சாப்பிடுவதற்காகவே.
DOLLAR GLUCOSE
DOLLAR GLUCOSE
DOLLAR GLUCOSE
DOLLAR ORANGE CREAM
DOLLAR TRIO
DB
உங்களின்
இனிமையான
ருசிக்கு "டாலர் பிஸ்கட்டுகள்"
டாலர் ஃபுட் கார்ப்பரேஷன்,
கதிர்வேடு-சென்னை. 600 066.

"ஆறுகால்" ஸ்தோத்திரம் 19

ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்

"என் அடங்காப் பிடாரித்தனத்தைப் போக்கு, மனஸை அடக்கு. விஷய ஸுகமான கானல் நீரை நோக்கி ஓடுகிற என் இந்திரியங்களைக் கட்டிப் போடு" என்று இதுவரை ஒரு பக்தன் தன்னளவில் பிரார்த்தித்துக் கொள்ள வேண்டியதையெல்லாம் சொன்னார் ஸ்ரீ ஆசார்யாள். ஒருத்தனுக்கு எளிமை வந்து, மனஸும் இந்திரியமும் வசமாகிவிட்டதென்றால், அப்புறம் தன்னளவில் வேறொன்றுமே வேண்டாம்.

ஆனால் ஆசார்யாள் இப்படித் தன்னளவில் மோக்ஷத்துக்கான உபாயங்களைச் சாதித்துக் கொள்வதோடு பிரார்த்தனையை நிறுத்தவில்லை. அவர் லோகமெல்லாம் பொய், மாயை என்று ஒரு பக்கம் சொன்னவர் என்றால், இன்னொரு பக்கம் லோகம் முழுதிடமும் பரம கருணை கொண்டவர். லோகம் பொய் என்று அவர் சொன்னபோது இது மலடி மகன் மாதிரியோ முயல் கொம்பு மாதிரியோ முழுப் பொய் என்று சொல்லவில்லை. லோகம் ஒரு சொப்பனம் மாதிரி என்பதையே மாயை, பொய் என்றார். சொப்பனம் என்பது மலடி மகன் மாதிரியோ, முயல் கொம்பு மாதிரியோ ஒருகாலும் இல்லாத பொய் இல்லை. சொப்பனம் காணுகிற வரைக்கும் அது இருக்கத்தான் செய்கிறது. ரொம்பவும் நிஜம் மாதிரியே இருக்கிறது. ஆனாலும் விழித்துக் கொண்ட பின் பொய்யாகி விடுகிறது. இப்படி அரை குறை உண்மையாக இருப்பதைத்தான் மாயை, மித்யை, ப்ராதிபாஸிக ஸத்தியம் என்றெல்லாம் ஆசார்யாள் சொல்லியிருக்கிறார். லோகத்தையே முழு சத்தியம் என்று நினைத்து நாம் தடுமாறிக் கொண்டிருக்கிறோம். நம்மை ஞானிகளாக விழிக்கப் பண்ணி, இந்தச் சொப்பனத்தைக் கலைத்துக் கொள்ளும்படியாகச் செய்ய வேண்டும் என்கிறதையே ஒரு ஜன்ம விரதம் மாதிரி வைத்துக்கொண்டு, பரம கருணையுடன், நமக்காக இள வயதிலேயே அலுக்காமல் சலிக்காமல் மூன்று தடவை இந்தத் தேசம் முழுவதையும் சுற்றிச் சஞ்சாரம் செய்தவர் நம் ஆசார்யாள். தாம் ஸதா காலமும் இருந்து கொண்டிருந்த பரம ஞான நிலையிலேயே ஆத்மா ராமனாக அவர் பாட்டுக்கு உட்கார்ந்து கொண்டிருக்கலாம். ஆனால் அவர் அப்படிச் செய்யாமல் க்ஷணம்கூடச் சும்மா யிராமல், இத்தனை பாஷ்யம் எழுதினார், ஸ்தோத்திரம் எழுதினார், ஊர் ஊராய்ப் போய் வாதம் பண்ணினார், க்ஷேத்திரம், க்ஷேத்திரமாகப் போய் மூர்த்திப் பிரதிஷ்டை, யந்திரப் பிரதிஷ்டை என்றிப்படிப் பண்ணினார் என்றால் இத்தனைக்கும் காரணம் அவருடைய அபார கருணைதான்.

அதனால்தான் இந்த ஷட்பதீ ஸ்தோத்திரத்தில் ஸ்ரீ மஹா விஷ்ணுவிடம் பிரார்த்தனை பண்ணும்போதும், **அவிநயம் அபநய, தமய மன:, சமய விஷய ம்ருக த்ருஷ்ணாம்** என்பதாக ஒரு பக்தன், தன் நிறைவுக்கான ஸகலத்தையும் வேண்டிக் கொள்வதோடு நிறுத்தாமல், இதைத் தொடர்ந்து,

**பூத தயாம் விஸ்தாரய**

என்கிறார். இங்கே 'பூதம்' என்றால் 'பிராணி வர்க்கம்', 'உயிர்க் குலம்.' "உயிர்க்குலம் முழுவதிடமும் என் அன்பை, அருளை, தயையை விஸ்தாரமாக ஆக்கு அப்பா!" என்று பிரார்த்தனை பண்ணுகிறார்.

எத்தனை ஞானம் வந்தாலும் போதாது. இருதயத்தில் தயையை ரொப்பிக்கொண்டு ஸமஸ்த ஜீவராசிகளுக்கும் நல்லது பண்ணிக் கொண்டே இருக்க வேண்டும். 'சங்கரர்' என்றாலே 'நல்லது பண்ணுகிறவர்' என்று

**[1932ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள், ஸ்ரீமுகங்கள், கட்டுரைகளிலிருந்து தொகுத்தது]**




தான் அர்த்தம் (Root meaning). சம்— நல்லது; கரர் — செய்கிறவர்.

பிள்ளையாரைப் பற்றி ஸகலருக்கும் தெரிகிற 'சுக்லாம்பரதரம்' ச்லோகம் மாதிரி, ஒவ்வொரு ஸ்வாமி பற்றியும் ஏராளமான ச்லோகம் இருந்தாலும் ஏதாவது ஒன்று ரொம்பப் பிரஸித்தமாக இருக்கும். ஸ்ரீ ராமன் என்றால் 'ஆபதாம் அபஹர்த்தாரம்' எல்லோருக்கும் தெரிந்திருக்கும். ஸரஸ்வதி என்றால்' யா குந்தேந்து' அநேகமாகப் பலபேருக்குத் தெரியும். விஷ்ணுவுக்கு 'சாந்தாகாரம் புஜக சயனம்' ச்லோகம். இதே மாதிரி நம் ஆசாரியாளைப் பற்றி ரொம்பப் பிரஸித்தமாக இருக்கிற ச்லோகம்,

ச்ருதி ஸ்ம்ருதி புராணானாம் ஆலயம் கருணாலயம்
நமாமி பகவத்பாத சங்கரம் லோக சங்கரம்

இதிலே முதலில் அவர் வேதம் (ச்ருதி), சாஸ்திரம் (ஸ்மிருதி), புராணம் எல்லாவற்றுக்கும் உறைவிடமான (ஆலயம்) மஹா பெரிய அறிவாளி என்று சொல்லிவிட்டு, அப்புறம் "கருணாலயம்". அவர் கருணையே குடிகொண்ட ஒரு கோயில் என்றும் சொல்லியிருக்கிறது. முடிக்கிறபோதும், அவர் சங்கரர், லோகத்துக்கெல்லாம் சம்—கரர், நல்லதைச் செய்பவர் என்று சொல்லியிருக்கிறது.

நம் ஆசார்யாள் ஞானத்திலும் சமுத்திரம், கருணையிலும் சமுத்திரம். அதனால்தான் நமக்கும் பிரார்த்தனை பண்ணச் சொல்லிக் கொடுக்கும்போது ஆத்மாபிவிருத்தியோடு நிறுத்தாமல், பூத தயையையும் வேண்டிக் கொள்ளச் சொல்கிறார்.

இங்கே "பூத தயையை விஸ்தாரப்படுத்து" என்று மஹாவிஷ்ணுவிடம் வேண்டிக்கொண்டவர், 'சிவ அபராத க்ஷமாபண ஸ்தோத்திரம்' என்பதில் பரமேச்வரனைப் பிரார்த்திக்கும்போது,

ப்ராணினாம் நிர்தயத்வம் மாபூதேவம்,
மம பசுபதே! ஜன்ம ஜன்மாந்தரேஷு

என்கிறார். (பௌரோஹித்யம் என்று ஆரம்பிக்கும்) அந்த ச்லோகத்தில் 'எனக்கு இன்னின்ன நல்லதுகள் வேண்டும்' என்று சொல்லாமல், 'என்னிடம் இன்னின்ன கெட்டதுகள் சேராமலிருக்க வேண்டும்' என்று பலவற்றைச் சொல்லிக் கொண்டே போகிறார். அந்த வரிசையில்தான், "எனக்குப் பிராணிகளிடம் நிர்தயை (தயையின்மை) ஜன்ம ஜன்மத்திலும் ஏற்படாமல் இருக்கட்டும்" என்கிறார். ஸம்ஹார மூர்த்தியான ஈச்வரனிடத்தில் தயையின்மையை நாசம் செய்யும்படி 'நெகடிவ்' ஆக வேண்டிக் கொண்டவர், இங்கே ஜகத் பரிபாலன மூர்த்தியான மஹாவிஷ்ணுவிடம் 'பாஸிடிவ்' ஆக,

பூத தயாம் விஸ்தாரய

என்று பிரார்த்தனை பண்ணுகிறார்.

சரி, இன்னம் என்ன பிரார்த்தனை பண்ண வேண்டும்?

தாரய ஸம்ஸார ஸாகரத:

(தொடரும்)

## மும் முகம் எங்கள் மோகம்

ஒட்டி நின்ற நாம் இருவர்...
உறவுக்கொரு கடல், ஒன்றுபட்ட உணர்வு.
கட்டழகர் அவர் நெஞ்சம் கடலாழம்,
சட்டையோ கடல் நீலம்... அதற்கு
ஒட்டி இசைந்திடுதே என் உடுப்பு;
தொட்டணைக்குதடி அலைக்கரங்கள்.

என்றும் அவர்கள் ஆடை.... இயற்கையாக மபத்லால்.




**மபத்லால் துணிவகைகள்:**

சூட்டிங் • ஷர்ட்டிங் • சேலைகள்
• டிரெஸ் மெட்டீரியல்ஸ் • ஷர்ட்

everest/463/MS-tm

# உங்கள் குழந்தையை இந்தக் கோடையில் வேர்க்குரு எங்கு தாக்கும்?




வேர்க்குரு எங்கு தாக்கினாலும், அதை முறியடிக்க உபயோகியுங்கள் ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர். ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடரில் மட்டுமே நிரூபணம் பெற்ற மருந்துக் கலவை அடங்கியுள்ளது. அது மூன்று வழிகளில் செயலாற்றுகிறது.

- வியர்வையை உறிஞ்சுகிறது; சருமத் துவாரங்கள் அடைபடுவதைத் தடுக்கிறது.
- பாக்டீரியா கிருமிகள் பெருகுவதைத் தடுக்கிறது.
- சுகமும் குளுமையும் தந்து, உடனடி நிவாரணம் அளிக்கிறது. ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடரைக் குளித்தவுடனும், படுக்கும் முன்பும் உடம்பின்மீது தாராளமாகத் தூவுங்கள். உடனடியாக வேர்க்குருவைத் தடுக்கத் தாய்மார்கள் நம்பும் மருந்து கலந்த வேர்க்குரு பவுடர் இது ஒன்றுதான்!




சந்தன மணத்திலும் கிடைக்கிறது.

## ஜான்ஸன்ஸ்* ப்ரிக்லி ஹீட் பவுடர் மட்டுமே உடல் எரிச்சலை நிறுத்துகிறது, அரிப்பிலிருந்து நிவாரணமளிக்கிறது உடனடியாக.

Johnson & Johnson

* Trademark © J&J 75

OBM-4316/R TAM



"'கல்கி' பத்திரிகையிலிருந்து வந்திருக்கிறார்கள்!" ஏ.டி.ஸி. கூறவே, ஏறிட்டு நோக்கினார் தமிழக ஆளுநர் ஸ்ரீ பட்வாரி. அவரிடம் நேயர்களின் சார்பில் 'கல்கி', 'கோகுலம்', 'ஸ்வராஜ்யா' பத்திரிகைகளைக் கொடுத்தேன்.

"'கல்கி'யின் புகழ் கேள்விப்பட்டிருக்கிறேன். இசை, இலக்கியம், சமூகம், கலைகள் ஆகியவற்றுக்கு அறம் சார்ந்த அற்புதப் பணி செய்து வருகிறது என்பதையும் அறிவேன். அறம், அரசியல், அறிவியல் எந்துறையிலும் கூடக மேதைகளுக்கெல்லாம் மேதையாகத் திகழ்ந்த ராஜாஜியின் நிழலில் ஆசிரியர் 'கல்கி' செய்துள்ள பணிகளும், இசையரசி எம். எஸ்ஸும் அவர் கணவர் ஸ்ரீ சதாசிவமும் இசை மூலம் இறை பணி செய்து வரும் விஷயங்களும் கூடத் தெரியும். 'கல்கி' பத்திரிகை சமூகத்துக்குச் செய்யும் நற்பணிகளுக்கு என் நல்வாழ்த்துக்கள்!"

இப்படிக் கூறிவிட்டுக் 'கோகுலத்'தைக் கையில் எடுத்துக் கொண்டபோது "எங்கள் நிறுவனம் குழந்தைகளுக்காக நடத்தும் பத்திரிகை இது. 'கோகுலம்' என்று பெயர். சிறுவர்களுக்கு அறமும் அறிவும் பயிற்றுவிக்க இது தன்னால் இயன்ற தொண்டு செய்து வருகிறது!" என்றேன்.

"பேஷ்!" என்றவர் 'ஸ்வராஜ்யா' பத்திரிகையைப் புரட்டிக் கொண்டே, "இதன் ஆசிரியர் ஸ்ரீ சந்தானத்தை இன்று காலை பார்த்தேன். நாற்பது நிமிடங்கள் பேசிக்

# ஆளுநரோடு அரைமணி

கொண்டிருந்தோம். அத்தனை நிமிஷங்களும் நாற் நிமிஷமாக ஓடி விட்டாற் போலிருந்தது. அவரது கனிவான கருத்துக்களும் ஆழ்ந்த சிந்தனைகளும் நற்பயன் விளைவிக்கவல்லவை" என்றார்.

சற்றுநேர மௌனத்துக்குப் பின், "எனது முன்வினையின் நற்பயனே என்னைத் தமிழ் நாட்டுக்குப் பணி புரியக் கொண்டு விட்டிருக்கிறது!" என்று கூறியவரின் கருத் தோட்டம் காந்தியடிகளை நோக்கித் தாவியது.

"எங்கள் குடும்பத்துக்கும் காந்திஜியின் குடும்பத்துக்கும் எங்கள் தாத்தா காலத்திலிருந்தே தொடர்புண்டு. என் தாத்தா குஜராத்தில் திவானாக இருந்திருக்கிறார். காந்திஜியை மேல் நாட்டுப் படிப்புக்கு அனுப்பிய பெருமை அவர் மூலம் எங்கள் குடும்பத்துக்கு உண்டு. அதற்குப் பிரதியாகக் காந்திஜி என்ன செய்தார், தெரியுமா? என்னை விடுதலைப் போரின் ஒரு சிப்பாயாக ஏற்றார். அதனால் சிறை செல்லும் பெருமை எனக்குக் கிடைத்தது. காந்திஜிக்குத் தென் ஆப்பிரிக்காவில் தோழர்களாக இருந்து விடுதலை உணர்வுக்கு வித்திட்டவர்கள் குறிப்பாகத் தென் இந்தியத் தமிழர்கள். அந்தத் தமிழ் நாட்டுக்குப் பணி செய்ய வரும் பாக்கியம்

ரா. வீழிநாதன்



▫ ஸ்ரீ காந்தியின் குழந்தையுடன் கவர்னர்.
▫ 'கல்கி' பத்திரிகையும் கையுமாக...

எனக்குக் கிட்டியுள்ள தென்றல், அது ஏதோ ஒரு விட்ட குறை, தொட்ட குறைதானே?''

இப்படி அவர் கூறிக் கொண்டிருந்தபோது ஒரு சிறுமி ஓடி வந்தாள். 'ஸ்வீட் கேர்ள்!' என்று கூறி அப்படியே வாரித் தூக்கிக் கொண்டார். மெய்க்காப்பாளர் ஸ்ரீகாந்தின் செல்லக் குழந்தை; செல்லப் பெயரும் ஸ்வீட்டி!

''எனக்குக் குழந்தைகள் என்றால் ரொம்பப் பிடிக்கும்!'' என்றவருக்குத் தம் பேத்திகளின் நினைவு வந்து விடுகிறது. ''எனக்கு ராதிகா, கோபிகா என்று இரண்டு பேத்திகள். அவர்களுக்குத் தமிழ் நன்றாகத் தெரியும். என்னோடு தமிழில் பேசி என்னைத் திணற அடித்து விடுவார்கள்!'' என்கிறார் முகத்தில் பெருமை பூக்க.

''அப்படியா? எப்படி?''

''எனக்கு ஒரே மகள். ரன்னு என்று பெயர் அவளும் என்னைப் போல் வழக்கறிஞர். உயர்நீதி மன்றத்தில் தொழிலாற்றி வந்தாள். கல்யாணம் ஆனபின் தன் கணவர் டாக்டர் எஸ். எஸ். ஷாவோடு கோயமுத்தூருக்கு வந்து விட்டாள். கரும்புச் சாகுபடித் துறையில் டைரக்டராகப் பத்து ஆண்டுகள் அவர் கோயமுத்தூரிலேயே இருந்திருக்கிறார். அப்பொழுது பிறந்த குழந்தைகள், தமிழ்த் தாயின் குழந்தைகளாகத் தமிழே பேசவார்கள். அவர்கள் பேசும் மொழி புரியாவிட்டாலும் எனக்குப் பெருமை பிடிபடாது.''

'' 'பட்வாரி' என்று எப்படிப் பெயர் வந்தது?''

'பட்டா' என்ற சொல் தமிழர்களுக்குப் புதிதில்லை. பட்டா போன்ற கிராமக் கணக்கு வழக்குகளை வைத்துக் கொள்கிறவர்கள் பட்வாரி எனப்படுவர். அதாவது கிராமக் கர்ணம்.

ஸ்ரீ பட்வாரியின் முன்னோர்கள் ஒரு காலத்தில் வடக்கேயிருந்து போர்ப் படையினரோடு கணக்குப்பிள்ளைகளாகக் குஜராத்துக்கு வந்திருக்கிறார்கள். வந்தவர்கள் குஜராத்திலேயே தங்கியும் விட்டார்கள். குஜராத்தி மரபை யொட்டி அவரது பெயர் பிரபுதாஸ் பாலுபாய் பட்வாரி என்று விரிந்திருக்கிறது.

ஸ்ரீ பட்வாரியின் துணைவி ஸ்ரீமதி லலிதா பகலுலும் சிறந்த சமூக சேவகி.

''எந்தக் காலத்திலுமே பாரதம் ஒன்று என்பதைக் காசி — ராமேசுவரம் போன்ற தலங்கள் நிலைநாட்டியிருக்கின்றன. சங்கரர்—ராமானுஜர் போன்றவர்கள் இந்த ஒருமைப்பாட்டினை மேலும் வளர்த்திருக்கிறார்கள். இந்த இணைப்புக்கு ஒரு மொழி தேவைப்படவில்லை. கருத்து ஒற்றுமையே வழி வகுத்திருக்கிறது!'' என்றவர், ''உங்களுக்கு ஹிந்தி தெரியுமோ?'' என்று கேட்டார்.

''என்னோடு வந்திருக்கும் புகைப்பட நிபுணர் 'உத்ரா'வுக்கும் ஹிந்தி தெரியும்!'' என்றேன்.

''பேஷ்!'' என்றவர், ''அரசியல்' கலக்காமல் இருந்தால் மொழிகள் கூட ஒன்றுபட்டு விடும் போலிருக்கிறதே!'' என்றார். அதே கையோடு, ''தமிழ் நாட்டு மக்களுக்கு அப்படிப் பணியாற்றவே நான் சிறு தொண்டனாக வந்திருக்கிறேன். நான் காந்தியடிகளின் நிர்மாணத் திட்டங்களைத் தமிழ் நாட்டில் வேரோட விட்டு, நாடு முழுவதற்கும் தமிழ் நாடு வழிகாட்டியாக அமைய வேண்டும் என்று விரும்புகிறேன். நானும் மனிதன். என்னை அறியாமல் தவறுகள் நேர்ந்துவிடலாம். அதனால் வல்லமை படைத்த ஆண்டவன், என்னை விழிப்போடு வைத்து, ஏழை—எளிய மக்களுக்கு நல்லபடி பணியாற்றத் தூண்ட வேண்டும். அதற்கான சக்தியையும் புத்தியையும் அளிக்க வேண்டும் என்று பிரார்த்திக்கிறேன். கல்கி யின் வாயிலாகத் தமிழ்நாட்டு மக்களுக்கு என் இதயம் கலந்த இனிய வாழ்த்துக்கள்!'' என்று கைகூப்பினார்.

அட்டையிலும் உள்ளும் படங்கள்: உத்ரா



**சுயநல சரிதங்கள் :**
**வாழாத வரலாறுகள் !**

○ நீ காலமான பிறகு உலகம் உன்னை மறந்து விடாமல் இருக்க வேண்டுமானால் படிப்பதற்குரிய பயனுள்ள விஷயங்களை எழுது; அல்லது எழுதுவதற்குரிய பயனுள்ள காரியங்களைச் செய்.
- பெஞ்சமின் ஃப்ராங்க்ளின்

○ சுயசரிதம் என்பது உண்மைகளைக் கூறுவதற்குரிய ஈடு இணையற்ற அற்புதமான சாதனம் - பிறரைப் பற்றிய உண்மைகளை!
-பிலிப் குடாலா

○ நன்றாக எழுதப்பட்ட சுயசரிதம் என்பது நன்றாக நடத்தப்படும் வாழ்க்கை எவ்வளவு அரிதோ அவ்வளவு அரிதானது.
- தாமஸ் கார்லைல்

○ உன் அனுமதியின்றி உன்னை யாரும் தாழ்வு மனப்பான்மை கொள்ளச் செய்ய முடியாது.
- எலினர் ரூஸ்வெல்ட்

○ வாழ்க்கை வரலாறுகள் ஒரு மனிதனின் ஆடையும் பித்தான்களுமே. மனிதனைப் பற்றியே வாழ்க்கை வரலாறு எழுதுவது என்பது நடக்காத காரியம்.
- மார்க் ட்வெய்ன்

○ தன்னைப் பற்றி அசாதாரணமான விஷயம் ஒன்றைக் கூற வேண்டியிருப்பதாக நம்பாத மனிதன் உலகில் கிடையாது.
- சாமுவேல் ஜான்சன்

○ நீ எனக்கு சுயசரிதங்கள் ஏதும் அனுப்பி வைக்கவில்லை; எனக்கு அவை தேவையும் இல்லை. நான் பிறருக்குக் கொடுத்துவிடும் புத்தகங்கள் அவைதாம்!
- சார்லஸ் லாம்ப்

நன்றி: அமெரிக்கன் ரீவ்யூ

# பார்த்திபன் கனவு

## அத்தியாயம் 19

## பொன்னனின் சிந்தனைகள்

பொன்னன் பராந்தகபுரத்தின் வீதியில் போய்க் கொண்டிருந்தபோது, எதிரில் இராஜ பரிவாரங்கள் வந்து கொண்டிருப்பதைக் கண்டு ஒதுங்கி நின்றான். பல்லக்கில் அமர்ந்திருந்த குந்தவி தேவியைத் தீவர்த்தி வெளிச்சத்தில் பார்த்தான். இதற்கு முன் அவன் மனத்தில் என்றும் தோன்றாத பக்தியும் மரியாதையும் அவளிடம் அவனுக்கு உண்டாயிற்று. தெய்வீக சௌந்தரியம் பொருந்திய இந்தத் தேவியின் உள்ளமும் தெய்வத் தன்மை கொண்டதாக வல்லவா இருக்கிறது? வழியில் அநாதையாய்க் கிடந்தவனைத் தூக்கித் தன்னுடைய பல்லக்கில் ஏற்றிக் கொண்டு வருவதற்கு எவ்வளவு கருணை, தயாளம், பெருந்தன்மை வேண்டும்?

அன்றிரவு பொன்னன் அவ்வூர்க் கோயில் பிராகாரத்தில் படுத்துக் கொண்டே மேலே செய்ய வேண்டியதைப் பற்றிச் சிந்தனை செய்தான். இளவரசரோ சரியான சம்ரக்ஷணையில் இருக்கிறார். குந்தவி தேவியைக் காட்டிலும் திறமையாக அவரைத் தன்னால் கவனிக்க முடியாது. இளவரசர் எங்கே போக விரும்பினாரோ அவ்விடத்துக்கே குந்தவி தேவி அவரை அழைத்துப் போகிறார். ஏதோ சோழ வம்சத்தின் குலதெய்வமே இவ்விதம் ஏற்பாடு செய்ததென்று சொல்லும்படி எல்லாம் நடந்திருக்கிறது. எப்படியும் இளவரசருக்கு உடம்பு நன்றாய்க் குணமாகச் சில தினங்கள் ஆகும். அதுவரைக்கும் அவரைத் தான் பார்க்கவோ, பேசவோ சௌகரியப்படாது. பின்னர், அவருக்கு உடம்பு குணமாகும் வரையில் தான் என்ன செய்வது? பின்னோடு தொடர்ந்து போவதினாலோ, உறையூருக்குப் போய் உட்கார்ந்திருப்பதினாலோ என்ன பிரயோஜனம்? அதைக் காட்டிலும் ராணி அருள்மொழித் தேவியை விடுதலை செய்ய வேண்டிய காரியத்தைப் பார்ப்பது நலமல்லவா? இதற்குச் சிவனடியாரைப் போய்ப் பார்த்து அவருடன் கலந்து ஆலோசனை செய்ய வேண்டும். அருள்மொழித் தேவியைப் பற்றி ஏதாவது துப்புத் தெரிந்தவுடன் தம்மிடம் வந்து தெரிவிக்கும்படி சொல்லியிருக்கிறார். தம்மைச் சந்திக்க வேண்டிய இடத்தையும் குறிப்பிட்டிருக்கிறார். மாமல்லபுரத்துக்குச் சமீபத்தில் அடர்ந்த காட்டுக்குள் மறைந்திருக்கும் சிற்பியின் வீட்டைக் கண்டுபிடிக்கச் சொல்லியிருக்கிறார். அங்கே போய் அவரைச் சந்தித்து, எல்லா விஷயங்களையும் சொல்லி, அவருடைய யோசனைப்படி நடப்பதுதான் உசிதம் என்று தீர்மானித்தான்.

மறு நாள் காலையில் ராஜபரிவாரங்கள் பராந்தகபுரத்தை விட்டுக் கிளம்பி உறையூர்ச் சாலையில் போவதைத் தூர இருந்து பொன்னன் பார்த்து, ''பகவானே! எங்கள் இளவரசரைக் காப்பாற்று; நான் மாமல்லபுரத்திலிருந்து திரும்பி வருவதற்குள் அவர் உடம்பு பூர்ணமாய்க் குணமாகி விட வேண்டும்'' என்று மனத்துக்குள் வேண்டிக் கொண்டான். பரிவாரங்கள் மறைந்ததும், எதிர்த் திசையை நோக்கி நடக்கலானான்.

*அமரர் கல்கி*

அவனுடைய கால்கள் மாமல்லபுரத்தை நோக்கிச் சென்று கொண்டிருந்த போதிலும் உள்ளம் மட்டும் இளவரசர் படுத்திருந்த பல்லக்குடன் உறையூரை நோக்கிப் போய்க் கொண்டிருந்தது.

குந்தவி தேவியின் பராமரிப்பில் இளவரசர் இருப்பதினால் ஏற்படக் கூடிய அபாயம் அவனுக்கு அடிக்கடி நினைவு வந்து கொண்டிருந்தது. பல்லக்கில் படுத்திருக்கும் நோயாளி உண்மையில் சோழ நாட்டு இளவரசர் என்பதைக் குந்தவி அறிந்தால் என்ன ஆகும்? ஜுர வேகத்தில் இளவரசர் பிதற்றும்போது அந்த உண்மை வெளியாகி விடலாமல்லவா? அல்லது வஸந்த மாளிகையில் அவர் நல்லுணர்வு பெற்றதும், திடீரென்று பழைய இடங்களைப் பார்க்கும் வியப்

பினால் தாம் இன்னார் என்பதை வெளியிட்டு விடலாமல்லவா? — அதனால் ஒரு வேளை ஏதேனும் விபரீதம் விளைந்து விடுமோ! குந்தவி தேவிக்கு உண்மை தெரிந்தால் அவளுடைய தமையனுக்கும் தெரிந்துதான் தீரும். பிறகு, சக்கரவர்த்திக்கும் தெரியாமல் இராது. சக்கரவர்த்தியினால் தேசப் பிரஷ்டம் செய்யப்பட்டவர் அல்லவா இளவரசர்? அதை மீறிப் பொய் வேஷத்தில் வந்ததற்குச் சிட்சை மரணமேயல்லவா?

ஆனால் கடவுள் அருளால் அப்படியெல்லாம் ஒன்றும் நேராது என்று பொன்னன் தன்னைத் தானே தைரியப் படுத்திக் கொண்டான். குந்தவி தேவிக்கு ஒருவேளை உண்மை தெரிந்தால், அவர் இளவரசரைக் காப்பாற்றவே முயல்வார். முன்னம் தேசப் பிரஷ்ட தண்டனை விதிக்கப்பட்ட போதே அவருக்காக மன்னிப்புக் கோரி மன்றாடியதாகக் கேள்விப் பட்டிருக்கிறோமே? அதைப் பற்றிச் சிவனடியார் அருள்மொழி ராணியிடம் எவ்வளவெல்லாம் சொன்னார்?..

சிவனடியாரையும் குந்தவி தேவியையும் பற்றிச் சேர்ந்தாற்போல் நினைத்ததும், பொன்னனுக்கு நேற்றிரவு மகேந்திர மண்டபத்தின் வாசலில் நடந்த சம்பாஷணை நினைவு வந்தது. மனத்தில் இன்னதென்று சொல்ல முடியாத கவலையும் திகிலும் உண்டாயிற்று. சிவனடியாரைப் பிடித்துக் கொண்டு வரும்படி குந்தவி தேவி மாரப்ப பூபதிக்குக் கட்டளை இட்டிருக்கிறாளாமே? இது எதற்காக?

அந்தச் சிவனடியார்தான் யார்? அவர் உண்மையில் உத்தம புருஷர்தானா? அல்லது கபட சந்நியாசியா? சோழ குலத்துக்கு அவர் உண்மையில் சிநேகிதரா? அல்லது சிநேகிதர் போல் நடிக்கும் பகைவரா? இளவரசர் திரும்பி வந்திருப்பது பற்றியும், இப்போது குந்தவி தேவியின் பராமரிப்பில் வசந்த மாளிகைக்குப் போயிருப்பது பற்றியும் அவரிடம் சொல்லலாமா, கூடாதா! ஐயோ! இதையெல்லாம் பற்றி இளவரசரிடம் கலந்து பேசாமல் போனோமே என்று பொன்னன் துக்கித்தான்.

இன்னொரு விஷயம் பொன்னனுக்கு வியப்பை அளித்தது. இளவரசரை ஒற்றர் தலைவன் ஆபத்திலிருந்து விடுவித்த பிறகு அன்றிரவு காட்டில் ஒரு சிற்பியின் வீட்டில் தங்கியதாக அல்லவா சொன்னார்? தன்னைச் சிவனடியார் வந்து காணச் சொல்லியிருப்பதும் காட்டின் நடுவில் உள்ள சிற்பியின் வீட்டில் தானே? அடையாளங்களைப் பார்த்தால் இரண்டும் ஒரே இடமாக அல்லவா தோன்றுகிறது? ஒற்றர் தலைவனுக்கும் சிவனடியாருக்கும் ஏதேனும் சம்பந்தம் உண்டோ?



சிவனடியார் ஒரு மகான் என்ற எண்ணம் பொன்னனுக்குப் 'பூரணமாக இருந்தது. அவர் தன்னை ஒரு சமயம் மாரப்பனிடம் அகப்படாமல் காப்பாற்றியதை அவன் எந்த நாளும் மறக்க முடியாது. இன்னும், அருள்மொழி ராணி அவரிடம் பூரண நம்பிக்கை வைத்திருந்தார் என்பதிலும் சந்தேகம் இல்லை.

. ஆனாலும், அவர் உண்மையான சிவனடியார் அல்ல — அவ்விதம் வேஷம் பூண்டவர் என்று சந்தேகிப்பதற்கு வேண்டிய ஆதாரங்கள் இருந்தன. வள்ளி இவ்விதம் சந்தேகத்துடன் அவர் யார் என்பதைப் பற்றியும் ஓர் ஊகம் கூறினாள். அதாவது அவர் உண்மையில் பார்த்திப மகாராஜாதான் — மகா

ராஜா போர்க்களத்தில் சாகவில்லை — தன்னந்தனியே தாம் உயிர் தப்பி வந்ததை அவர் யாருக்கும் தெரிவிக்க விரும்பாமல் சிவனடியார் வேஷம் பூண்டிருக்கிறார் என்றுவள்ளி சொன்னாள். அவளுடைய மதி யூகத்தில் பொன்னனுக்கு எவ்வளவோ நம்பிக்கை உண்டு. என்றாலும் இதை அவனால் ஒப்புக் கொள்ள முடியவில்லை.

அவனுடைய சந்தேகத்தை அதிகப் படுத்தும்படியான இன்னொரு சம்பவம் நேரிட்டிருந்தது. அருள் மொழி ராணி தீர்த்த யாத்திரை கிளம்பிச் சென்ற பிறகு பொன்னன் பெரிதும் மனச் சோர்வு அடைந்திருந்தான். தோணித்துறைக்குச் சற்றுத் தூரத்தில் காட்டிலிருந்த ஐயனார் கோயிலுக்குப் போய்ப் பிரார்த்தனை செய்யலாமென்று அவன் போனான். அங்கே சந்நிதியில் வைத்திருந்த மண் யானைகளில் ஒன்று உடைந்து விழுந்திருப்பதைக் கண்டான். அதனருகில் அவன் சென்று பார்த்த போது, மண் குதிரையின் வயிற்றுக்குள் ஒரு துணி மூட்டை இருந்தது. அதிசயத்துடன் அவன் அந்த மூட்டையை அவிழ்த்துப் பார்த்தான். அதற்குள் புலித்தோல், ருத்திராட்சம், பொய் ஜடா முடி முதலியவைகள் இருக்கக் கண்டான். அப்போது அவனுக்கு உண்டான வியப்புக்கு அளவேயில்லை. யோசிக்க,யோசிக்க, இது சிவனடியாருடைய வேஷப் பொருள்கள் தான் என்பது நிச்சயமாயிற்று.



அந்த வேஷதாரி யார்? அவர் நல்லவரா, பொல்லாத சூழ்ச்சிக்காரரா?



அவரை நம்பலாமா, கூடாதா? அந்தப் பயங்கர மகா கபால பைரவர் மாரப்பன் காதோடு, சிவனடியாரைப் பற்றி ஏதோ சொன்னாரே. அது என்ன? கருணையும், தயாளமும் உருக்கொண்ட குந்தவி தேவி எதற்காக அந்தச் சிவனடியார் மேல் வெறுப்புக் கொண்டிருக்கிறாள்?

இதெல்லாம் பொன்னனுக்கு ஒன்றும் விளங்கவில்லை. ஆனால் அவன் ஒன்று நிச்சயம் செய்து கொண்டான். இந்தத் தடவை சிவனடியாரைச் சந்தித்ததும் அவரைத் தெளிவாக, ''சுவாமி, தாங்கள் யார்?'' என்று கேட்டு விட வேண்டியதுதான். திருப்தியான விடை சொன்னால் இளவரசர் திரும்பி வந்ததைப் பற்றியும், அருள்மொழி ராணி இருக்கும் இடத்தைப் பற்றியும் அவருக்குத் தெரிவிக்க வேண்டும். தகுந்த மறுமொழி கூறித் தன் சந்தேகத்தைத் தீர்க்கா விட்டால் ஒன்றும் சொல்லாமல் திரும்பி வந்து விட வேண்டும். இளவரசருக்கு உடம்பு குணமான பிறகு அவரை எப்படியாவது சந்தித்துக் கலந்தாலோசித்துக் கொண்டு மேற் காரியங்களைச் செய்ய வேண்டும்.

இவ்விதம் பலவிதமான யோசனைகளும் தீர்மானங்களும் செய்துகொண்டு பொன்னன் வழி நடந்து சென்றான். ஆங்காங்கே போக்கு வண்டிகள் கிடைக்கும்போதெல்லாம் ஏறிக் கொண்டு போனான். கடைசியில், மாமல்லபுரம் போகும் குறுக்குப் பாதையிலும் இறங்கிச் சென்றான். காட்டின் மத்தியிலுள்ள சிற்பியின் வீட்டுக்குச் சிவனடியார் மிகத் தெளிவாக அடையாளங்கள் சொல்லி யிருந்தார். அந்த அடையாளங்கள் புலப்படுகின்றனவா என்று வெகு கவனமாய்ப் பார்த்துக் கொண்டு அவன் போய்க் கொண்டிருக்கையில் அவனுக்கு எதிரே சற்றுத் தூரத்தில் ஒரு குதிரை வருவதையும் அது சட்டென்று குறுக்கே காட்டில் புகுந்து போவதையும் பார்த்தான். குதிரை மேலிருந்த வீரன் தன்னைக் கவனித்தானா இல்லையா என்பது பொன்னனுக்குத் தெரியவில்லை. ஆனால், இளவரசர் சொன்ன அடையாளத்திலிருந்து அவன் ஒற்றர் தலைவனா யிருக்கலாமென்று தோன்றியது.

திரும்ப வேண்டிய இடத்தைப் பற்றிச் சிவனடியார் கூறிய அடையாளங்கள் அதே இடத்தில் காணப்படவே, பொன்னனும் அங்கேயே தானும் திரும்பினான். படர்ந்து தழைத்திருந்த செடி கொடிகளை உராய்ந்து கொண்டு குதிரை போகும் சத்தம் நன்றாய்க் கேட்டுக் கொண்டிருந்தது. அந்த வழியைத் தொடர்ந்து பொன்னனும் போனான். ஒரு நாழிகை நேரம் இவ்விதம் போன பிறகு கொஞ்சம் திறந்த வெளி காணப்பட்டது. அதில் ஓர் அழகான சிற்ப வீடு தோன்றியது. அவன் சாலையில் பார்த்த குதிரை அவ்வீட்டின் பக்கத்தில் நிற்பதைக் கண்டான். அதே சமயத்தில் அவ்வீட்டுக்குள்ளிருந்து சிவனடியார் வெளியே வந்து புன்னகையுடன் அவனை வரவேற்றார். பொன்னனோ, அளவில்லாத வியப்புடனும் திகைப்புடனும் அவரை உற்று நோக்கினான். (தொடரும்)

## ஆத்ம சுத்தி

1952ம் ஆண்டு. அப்போது ஜே. பி. தபால் தந்தித் துறை ஊழியர்கள் சங்கத்தின் தலைவராக இருந்தார். அச்சமயம் அத்துறையின் அமைச்சராக இருந்தவர் ரஃபி அகமத் கித்வாய். அந்த ஊழியர் சங்கம் ஈடுபட்டிருந்த வேலைநிறுத்தம் ஒன்று, ஜே. பி.க்கும் கித்வாய்க்கும் இடையே நடைபெற்ற பேச்சு வார்த்தைகளால் கைவிடப்பட்டது. வேலைநிறுத்த காலத்தில் ஊழியர்களுக்கு ஊதியம் கொடுப்பது பற்றிய ஓர் ஒப்பந்தம் அந்தப் பேச்சு வார்த்தைகளின்போது ஏற்பட்டது. ஆனால் அந்த ஒப்பந்தம் எழுத்தில் இல்லாததால் பின்னால் மந்திரி தமது வாக்கை மீறி ஒப்பந்தத்தின்படி செயல்பட மறுத்து விட்டார்.

ஒப்பந்தத்தை எழுத்தில் எழுதி வாங்கிக்கொள்ளாத இந்தத் தவற்றுக்குத் தமது கவனக் குறைவுதான் காரணம் என்றும், தம்மை நம்பியிருந்த ஊழியர்களைத் தாம் கைவிட்டு விட்டது போலவும் ஜே. பி. உணர்ந்தார். இதைத் தொடர்ந்து உண்ணாவிரதம் ஒன்றை மேற்கொண்டார். உண்ணாவிரதத்துக்கு முந்தின நாள் வெளியிட்ட ஓர் அறிக்கையில் ஜே. பி. பின் வருமாறு கூறினார்:

இந்த உண்ணாவிரதம் மத்திய அரசுடனோ அல்லது திரு கித்வாயுடனோ சம்பந்தப்படாதது: திரு கித்வாயுடன் நடத்திய பேச்சு வார்த்தைகளின்போது நான் கவனக் குறைவாக இருந்ததை உணர்கிறேன்; அதன் விளைவு பலபேரைப் பாதித்தது: ஒரு பொதுக் காரியத்தில் நான் அசிரத்தையாக இருந்து விட்டேன்; அந்த எனது தவற்றுக்குப் பிராயச்சித்தமாக நான் மேற்கொள்ளும் இந்த உண்ணாவிரதம் வருங்காலத்தில் என் கடமைகளைச் செவ்வனே செய்ய எனக்கு உதவியாக இருக்கும்; இந்த என் உண்ணாவிரதத்தை அஞ்சல் ஊழியர்கள் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக்கொண்டு எந்தப் போராட்டத்திலும் ஈடுபடக் கூடாது.

- மீனு மஸானி

பவன்ஸ் ஜர்னலிலிருந்து எடுத்து எழுதியவர்: ராணிமைந்தன்



# இதோ! நீங்கள் துடிதுடிப்புடனும், ஊக்கத்துடனும் விளங்க சக்தியளிக்கும் எரிபொருள்.




# பூஸ்ட்

## மால்ட் சாக்லெட் மில்க் ட்ரிங்க்

ரயிலைப் போன்றே ஒவ்வொரு நாளும் உங்களுக்கும் நல்ல துவக்கத்திற்கு எரிபொருள் தேவை. ஆகையினால் தான் ஒவ்வொரு காலையும் உங்களுக்கு பூஸ்ட் தேவை

உயர் சுறுசுறுப்புடன் உங்களை இயங்கச் செய்யும் சக்திப் பொருள். வேலையிலும் விளையாட்டிலும் அதிகச் சக்தியைச் செலவிடும் உங்கள் குழந்தைகளுக்கு இது முக்கியமாகத் தேவை.

அவர்களுக்கு பூஸ்ட்-மால்ட் சாக்லேட் பால் பானமளியுங்கள். ஊட்டத்தைப் பற்றி குறைவற அறிந்த ஹார்லிக்ஸ் செய்வோர் தருவது

சக்தி வளமான ஏடு நிறைந்த பூஸ்ட் உங்களுக்கு அதிகப் படியான ஊட்டமளிக்கிறது.

ஆடை நிறைந்த பால், கோதுமை, பார்லி மால்ட், கோக்கோ ஆகியவற்றினால் செய்யப் பட்டிருப்பதே இதற்குக் காரணம்.

பூஸ்டின் ஆடை நிறைந்த மால்ட் சாக்லேட் சுவையை உங்கள் குடும்பத்தினர் மிகவும் விரும்புவார்கள்.

பூஸ்ட், ஒரு நாளைத் துவக்குவதற்கு மிகச் சிறப்பான முறை —ஒவ்வொரு நாளும இரண்டு அளவுகளில் கிடைக்கும்.

**ஹார்லிக்ஸ் தயாரிப்பாளர்கள் அளிப்பது.**



# சத்தியப் பிரமாணங்கள்

என் நண்பன் சசிகாந்தன் இப்படி மாறுவான் என்று நான் கனவிலும் நினைக்கவில்லை. அவனுக்கு என்னவாயிற்று? திடீரென்று இப்படிப் பக்காக் குடிகாரனாக எப்படி மாறினான்?

''டேய் ராகவா! சந்தியாவைத் தெரியுமா? ரொம்ப நல்லவள்! அவளை நான் 'லவ்' பண்ணினேன்... ஆனா... அவ வேற ஜாதியாம்! எங்க வீட்டிலே எங்கம்மா அவளைக் கல்யாணம் பண்ணிக்கக் கூடாதுன்னு சொல்லிட்டாங்க! என்னாலே வீட்டை எதிர்க்க முடியவில்லை! அம்மாவை மீற முடியவில்லை! என்னையே எதிர்க்க ஆரம்பிச்சேன். குடித்தேன். என்னை மறக்க ..... இல்லை.... சந்தியாவை மறக்க. நான் இன்னிக்குத்தான் குடிக்கிறேன் என்று நினைக்கறியா? இல்லை. ரொம்ப நாட்களாகக் குடிக்கிறேன். இன்னிக்குத்தான் உனக்குத் தெரியும்!'' சசிகாந்தன் குலுங்கிக் குலுங்கி அழுதான்.

பெங்களூருக்குப் போய் டாக்டருக்குப் படித்து வந்த என்னை என் அப்பாவும் அம்மாவும் சொந்த ஊரில் 'ப்ராக்டீஸ்' 'செட் அப்' பண்ண வேண்டும் என்று வற்புறுத்தினார்கள்.

ஊரோடு வந்து விட்டேன்.

கல்யாணமும் ஆகி விட்டது. அழகான மனைவி. நல்ல 'ப்ராக்டீஸ்'. ஒரு குறை இல்லை. சசியைப் பார்க்கப் போக வேண்டும் என்று நினைத்த நேரத்தில் .... ஒரு நாள்....

ஒரு பெண் அழுது கொண்டே என் 'டிஸ்பென்சரிக்குள்' நுழைந்தாள். அவள் பரபரப்பும் அவசரமும் எனக்குக் 'கேஸின்' முக்கியத்துவத்தை உணர்த்தின. அவளுடன் கிளம்பிப் போனேன்.

ஏழைமையான வீடு. தன் நினைவின்றிக் கிடந்தான் அவன்.

ஏதோ கண்ட மட்டச் சரக்கைப் போட்டு விட்டு....நினைவு தப்பிய நிலையில் நடு ரோட்டில் கிடந்த அவனை அவன் மனைவி, மற்றவர்கள் உதவியுடன் வீட்டுக்கு எடுத்துக் கொண்டு வந்திருக்கிறாள்!

சசி! சசிதான்! எனக்குப் 'பகீர்' என்றது. இவள் சசியின் மனைவியா?

அவள் பெயர் 'கௌசல்யா' என்பதை அறிந்தேன். திருமணமாகி இரண்டு மூன்று வருடங்கள் ஆயிற்றாம்... தினம் தினம் இப்படித் தான் குடித்துவிட்டு எங்கோ விழுந்து கிடக்கிறானாம்! தினம் வயிற்றில் நெருப்பைக் கட்டிக் கொண்டு அவன் வரவை அவள் எதிர்பார்த்துக் காத்திருக்கிறாளாம்! நல்ல வேலையில் இருக்கிறானாம்! ஆனால் ஆபீசுக்குச் சரியாகப் போவதில்லையாம்! மாதா மாதம் 'லாஸ் ஆப் பே'யாம்! இது என்ன கொடுமை?

தன் வீட்டாரை விரோதித்துக் கொண்டு சந்தியாவை மணக்க முடியாதவன், இப்போது இவளை யாருக்காக மணந்தான்?

''டாக்டர், நீங்கள்தான் இவரைக் காப்பாத்தணும். இந்த ரெண்டு வருஷங்களாப் போராடிப் போராடி நான் பாதி செத்தே போயிட்டேன். ஒரு வயசுக் குழந்தை வேறே.. இவர் இந்தக் குழந்தைக்குச் சொத்து ஏதும் வைக்க வேண்டாம். நல்ல தகப்பன் என்கிற நல்ல பெயரையாவது இவர் சம்பாதிச்சு வைக்க வேண்டாமா? என் கல்யாணத்துக்குக் கொடுத்த நகை, பாத்திரம், பண்டம் எல்லாம் காலி! இவரும் கொஞ்சம் கொஞ்சமாகக் காலியாக்கிக்கிட்டு வரார், என்ன பண்ணறதுன்னே தெரியல்லே...எனக்கு விஷம் தாங்க டாக்டர் ....விஷம்....''

அவள் அரற்றினாள். எனக்குப் பாவமாக இருந்தது. அவளுக்கு என்ன ஆறுதல் தருவது? மாற்று மருந்து தந்துவிட்டுச் சசியின் அருகிலேயே அமர்ந்தேன். தூளியில் குழந்தை நெளிந்தது. தாய்மைக்கே உரிய பாசத்துடன் அவள் அதன் அருகில் போனாள். அது சத்தியது.

சமையல் அறையில் அவள் பாத்திரங்களைப் புரட்டும் ஒலியும், டப்பாக்களைத் தட்டும் ஓசையும் கேட்டது! எல்லாம் காலி!

அவள் சொன்னது சரிதான்! எல்லாமே காலி!

நான் அவசரம் அவசரமாக வெளியே போனேன்! திரும்பி வரும்போது குழந்தைக்குப் புட்டிப்பால், சர்க்கரை ஆகிய சில முக்கிய பொருட்கள் என் கையில் இருந்தன.

''டாக்டர்....'' — அவள் மேலே பேச வாயெடுக்குமுன் நான் முந்திக் கொண்டேன். ''நான் இந்த வீட்டைப் பொறுத்தவரை டாக்டர் இல்லே.. அவன் சசி. என் பால்ய நண்பன். இப்போது என் தம்பி மாதிரி... இந்தக் குடும்பத்துக்கு வாங்கிப் போட எனக்கு உரிமை இருக்கு. பேசாம அழற குழந்தைக்குப் பால் கரைச்சுக் கொடுங்க.'' அவளுக்கு இரவு முழுவதும் கண் விழித்த மயக்கம், பசி மயக்கம்— அழக்கூடத் தெம்பற்றுக் கிடந்தாள். இரண்டு கண்கள் என்னை உற்றுப் பார்க்கிற பிரமை! சசி, விழித்துக் கொண்டு விட்டான்.

அவனைக் கண்களால் அளந்தபடி அருகில் போனேன். என் கைகளைப் பிடித்துக்கொண்டு அவன் அழுதான்.

ஒரு மாதம் சென்றிருக்கும். சசி சாதாரணமாக இருந்தான். திடீரென்று — கௌசல்யா அலறிக் கொண்டு ஓடி வந்தாள்.

நான் அவளை ஆசுவாசப்படுத்தி என்னவென்று கேட்டேன்....

மறுபடியும் பழைய குருடி கதவைத் திறடி கதையாம்...

இப்போது ஒரு புது 'டெக்னிக்கை'க் கையாளுகிறானாம்! ''ராத்திரி தூக்கமில்லே'' என்று

சொல்லி 'ஸ்லீப்பிங் பில்ஸ்' போட்டுக் கொள்கிறானும் இன்று அளவுக்கு அதிகமாக விழுங்கி விட்டான் போலிருக்கிறது.

''அவன் ஸ்லீப்பிங் பில்ஸ் போட்டுக் கொள்வது தெரிஞ்சும் ஏன் எங்கிட்டே சொல்லலே?'' நான் கத்தினேன். அவள் அழுதாள்.

''அவர் .... அவர்....தற்கொலை பண்ணிண்டுடுவேன் என்று பயமுறுத்தினார். நான் பெண்.... என்ன செய்ய முடியும்? நான்கூட 'ஸ்லீப்பிங் பில்ஸ்' போட்டுக் கொண்டு விடுவேன். தூளி காலியாக இருந்தால், வளரப் போறவன் குடிகாரனோ, கொலைகாரனோ வளர்க்க வேண்டியது தாயோட கடமை இல்லையா?''

மறுபடியும் அவள் வீட்டுக்கு ஓடினேன். அதேமாதிரி சசி நினைவின்றிக் கிடந்தான். அவன் கண்விழித்த போது அவனைக் கடுமையாகக் கண்டித்தேன். ''இனிமேல் குடிக்க மாட்டேன் என்று சத்தியம் பண்ணிக் கொடு....'' என்றேன்.

அவன் என் கையைப் பிடித்தான்.

''ப்ளீஸ்.... என்னை வற்புறுத்தாதே....''

''உன் இதயம் ரொம்ப கெட்டுக்கிடக்கு... ரொம்ப 'வீக்கா' இருக்கு. இனிமே நீ குடிச்சே அவ்வளவுதான்....'' — நான் கொஞ்சம் அதிகப்படியாகவே பயமுறுத்தினேன்.

''எனக்கு நிம்மதி'' — அவன் சிரித்தான்.

''அறிவு கெட்டத்தனமா சிரிக்காதே. உன் குடும்பத்தைப் பற்றி நினைக்கப் பார்த்தியா?''

''என்னைப்பத்தி நினைக்கப் பார்த்தியா?'' சசி என்னை மடக்குவதாக நினைத்துக் கேட்டான்.

''என்னடா நினைக்கறது? எதைக் கேட்டாலும் சந்தியான்னு சொல்லாப் போறே? அவளையே நினைச்சுத் தேவதாஸ் மாதிரி, கயஸ் மாதிரி உருகற உண்மைக் காதலனா இருந்தா ஒண்ணு எதிர்த்துப் போராடி இருக்கணும்? இல்லே, கல்யாணம் பண்ணிக்காமலாவது இருக்கணும்? கல்யாணமும் பண்ணிட்டு ஒரு குழந்தைக்குத் தகப்பனு ஆயிட்டுக் கடமையை மறந்துட்டுக் கடந்தகால அர்த்தமற்ற கற்பனை வாழ்வை நினைச்சிட்டு இப்படி நீயும் அழிஞ்சு உன் குடும்பத்தையும் அழிக்கிறது நல்லா இல்லே. நீ மனுஷனா? இல்லே, மிருகமா?'' நான் கொஞ்சம் கடுமையாகவே பேசினேன்.

''அடேயப்பா. என் குடும்பத்து மேலே அவ்வளவு அக்கறை இருந்தா என் குழந்தையைத் தத்து எடுத்துக்கோ. பவானியை மறுவிவாகம் செய்து கொள்!...'' சசி..சசியா... இப்படிப் பேசினான்?எனக்குக் கோபம் வந்தது!

அவன் 'போலிகளில்' வாழ்கிறான்! சந்தியாவை மறக்கத் திருமணம் ஒரு சாக்கு! இப்போது நான் வராமல் இருக்கக் கோபம் ஒரு சாக்கு! அவன் உள் மனத்தில் ஏதோ ஒரு போலி திரவிக் கொண்டிருக்கிறது.

நான் கோபமாக வெளியேறினேன்.

''இனி இந்த வீட்டில் கால் எடுத்து வைக்க மாட்டேன்.....'' என்று சொல்லியபடியே இறங்கினேன்.

''டாக்டர்!... டாக்டர்!'' கௌசல்யாவின் குரல் தீனமாகக் கேட்டது.

இது நடந்து இரண்டு மாதங்கள் ஆகி இருக்கும். அதன் பிறகு நான் அங்கே போகவில்லை. இப்போது 'சசி' எப்படி இருக்கிறானோ? பழைய நினைவுகளை நான் புரட்டிப் போட்டிருக்கிற நேரத்தில்... ஒரு டாக்ஸி என் 'டிஸ்பென்சரி'யின் வாசலில் வந்து நின்றது.





''ஆ! காட்டுங்க. பேரிச் சம்பழம் போடுறேன்.''
''எது பழம்?''
''உங்கள் ஸ்கூட்டரைப் போட்டதில் அரை கிலோ கிடைச்சது.''

அதிலிருந்து — கௌசல்யாவும் வயதான அவன் அம்மாவும் இறங்கினார்கள். பின் சீட்டில் பாதி சவமாகிப் போன நிலையில் சசி!

'எமர்ஜென்ஸி கேஸ்! ரொம்ப சிக்கலான நிலை... ஆபத்தான கட்டம்... இப்போது புதிதாக 'பெதடீன்' அவனாகவே போட்டுக் கொள்ளக் கற்றுக் கொண்டு விட்டானாம்!'

வீடு நிறைய மருந்தும், ஊசியும்! ஒருவரையும் அண்டவிடுவதில்லையாம்! பாதிநாள் அரை மயக்கம்! மீதிநாள் மாளாத் தூக்கம்!

சாப்பாடு தண்ணீர் எதுவுமே கிடையாதாம்! இந்த மயக்க வெறியில் ஸ்கூட்டரை வேறு தனியாக ஓட்டிக் கொண்டு வந்திருக்கிறான்! கண் மண் தெரியாமல் கீழே விழுந்து தோள் எலும்பு முறிவு!

அவனைப் பார்த்தேன்! உடல் முழுவதும் தானாக இஷ்டத்துக்குப் போட்டுக் கொண்ட ஊசிகளால் அங்கங்கே தடிப்புத் தழும்புகள். இரண்டு புஜங்களிலும் கறுப்பு கறுப்பான தழும்புகள்.

நான் 'ஆபரேஷன்' தியேட்டரை விட்டு வெளியே வந்த போது அந்த அறையின் வாசலில் அவன் அம்மாள் அழுதபடியே நின்று கொண்டிருந்தாள்.

பெற்ற அந்த நெஞ்சம் பரிதவித்த போது எனக்கு வேதனையாக இருந்தது! ஒன்றன் பின் ஒன்றாக அவனுக்குத்தான் எத்தனை விபத்துக்கள்! இத்தனை 'அனுபவித்த' இந்த அம்மாள் சந்தியாவுக்கு ஏன் இவனை மணமுடிக்க மறுத்தாள்? காரணத்தைக் கேட்காவிட்டால் எனக்கே பைத்தியம் பிடித்து விடும் போல் இருந்தது.

கௌசல்யா அழும் குழந்தையைச் சமாதானப்படுத்த வெளியே போயிருந்தாள். நான் தனி அறைக்கு அவன் அம்மாவை அழைத்துக்கொண்டு போய் மெல்லப் பேச்சுக் கொடுத்தேன். சந்தியாவைப் பற்றி விசாரித்தேன்.

''சந்தியாவா? அப்படி யாரையும் அவன் எங்கிட்டே சொல்லவும் இல்லே! நான் வேண்டாம்னு மறுக்கவும் இல்லையே! அவனா ஆசையோடு பெண் பார்த்துக் கல்யாணம் பண்ணிண்டது இந்தக் கௌசல்யாவைத்தான்! எனக்குத் தெரியவே தெரியாதே! இது என்ன புதுக் கதை?'' என்றாள் அவன் அம்மா.

எனக்குப் புரிந்து விட்டது. சசிக்கு ஒரு விசித்திரமான மன வியாதி என்று!

அவனாக உருவாக்கிக் கொண்ட ஒரு கற்பனைப் பாத்திரம் சந்தியா! அவன் குடிப்பதற்கு ஒரு காரணத்தை மற்றவர்கள் முன் உருவாக்கவும், தனக்குத்தானே புரியாத ஒரு சோகத்தைத் தன் மீது ஏற்றிக் கொள்ளவும் அவனாகக் கண்டுபிடித்துக் கொண்ட ஒரு விசித்திரக் கற்பனை!

சசிக்குச் சுய உணர்வு வர இரண்டு நாட்கள் ஆயின. ஜீவ மரணப் போராட்டம்தான்! சசியிடம் போய், ''கௌசல்யாவிடம் விவரமாகப் பேசி விட்டேன். நீ சந்தியாவை மணப்பதில் தனக்கு மறுப்பு இல்லேன்னு அவள் சொல்லி விட்டாள். நீ உயிரோட இருந்தால் போதும்னு உன் அம்மாவும் தவிக்கறா. இனிமேல் இந்த மாதிரி 'டிரக்' அடிக்டாக ஆக மாட்டேன்னு சத்தியம் பண்ணிக் கொடு. நீ சந்தியாவோட வாழப் போறதைப் பத்தி உன் அம்மாவுக்கோ உன் மனைவிக்கோ வெறுப்பு இல்லே... நீ இனிமேல் குடிக்கக் கூடாது. அதுதான் எங்களுக்கு வேணும்...

''நீ இப்போ பண்ணிக் கொடுக்கப் போற சத்தியம் பழைய சத்தியங்கள் மாதிரி காத்துலே பறக்கக்கூடிய சத்தியப் பிரமாணமாக இருக்கக் கூடாது. இத்தனை நாட்கள் நாம் பழகின நம்முடைய நட்பின் மேலே ஆணையா கடைசித் தடவையா சத்தியம் பண்ணித் தந்துடு. சந்தியாவைத் தேடிப் பிடிச்சு உனக்கே கல்யாணம் பண்ணித் தரேன்'' என்றேன்.

அவன் திகைத்துப் போனான்.

முன்பே கௌசல்யாவிடமும் அவன் தாயாரிடமும் சொல்லி இருந்ததால் அவர்கள் அதிர்ச்சியடையவில்லை. அவன் கண்கள் கண்ணீரைப் பொழிந்தன. அவனுள் சந்தியா மிகப் பலமாக நொறுங்கிப் போனதை என்னால் உணர முடிந்தது. அனுபவிக்கிற வேதனையின் சுகத்தைவிட, இந்த அதிர்ச்சி தாக்கியதை என்னால் உணர முடிந்தது.

ஆனால் என் கணக்கு தப்பவில்லை!

என் மனத்தத்துவ சிகிச்சை பலனளித்து விட்டது! சந்தியா அவனைச் சித்திரவதை செய்ய மாட்டாள்! என் கையை அவன் ஆதுரத்துடன் பிடித்தான். ''சத்தியமாக இனி நான் குடிக்க மாட்டேன்... பழைய மாதிரி இது போலியான சத்தியமல்ல. நம் நட்பின் மீது ஆணை.. நான் இனி குடிக்க மாட்டேன். என்னைப் பொறுத்த வரையில் சந்தியா செத்துப் போய் விட்டாள்!''

அவன் குலுங்கிக் குலுங்கி அழுதான். என்னுள் 'அந்தப் பழைய' நினைவுகள் கிளர்ந்தன. அன்று — என் முன்தான் அவன் சந்தியாவை உருவாக்கினான்... இன்று என் முன்தான் அந்த சந்தியாவுக்குச் சமாதி கட்டினான்! இனி கவலை இல்லை! கௌசல்யாவும் அவன் தாயாரும் கண்ணீரைத் துடைத்துக் கொண்டிருந்தார்கள். நானும் என் கண்ணீரைத் துடைத்துக் கொண்டேன்.

எனக்கு வெற்றி! எனக்கு வெற்.....

சசியின் 'பல்ஸ்' திடீரென்று 'டௌன்' ஆவதை உணர்ந்தேன். நான் பரபரப்பதற்கு முன் சசி சிரித்தபடி ..என்னைப் பார்த்து மௌனமாய்ச் சிரித்தபடி கண்களை மூடி விட்டான். சசி நட்பைக் காப்பாற்றி விட்டான்! இனி அவனால் தன் சத்தியத்தை மீற முடியாது! இனி அவனால் குடிக்க முடியாது!

ஆமாம்...மரணம் அவன் உயிரைக் குடித்து முடித்து விட்டது! கடவுளே! அவன் தாய்! மனைவி! நம்பிக்கையின் ஒளியோடு காத்திருக்கிற இந்த 'உறவுகளுக்கு' நான் என்ன சமாதானம் சொல்லப் போகிறேன்? பொய்யான ஓர் உறவு சத்தியமான இந்த உறவுகளைப் பொய்யாக்கி விட்ட கொடுமையை இவர்கள் எப்படித் தாங்கிக் கொள்ளப் போகிறார்கள்?

# காலத்தாலும் மாற்றமுடியாத சீரிய உண்மைகள், உன்னத் தரம்... உகந்த விலை

காலச் சக்கரம் சுழல்கிறது. அதோடு நாகரீகமும் மாறுகிறது. எஸ் குமார்ஸ்-காலத்தை முந்திச் செல்லநாங்கள் விரும்பினாலும் உன்னததரம், உகந்த விலை போன்ற சில சீரிய உண்மைகள் என்றும் மாறுவதில்லை. 'டெரீன்' ஸூட்டிங்குகள், ஷர்ட்டிங்குகள், புடவைகள் மற்றும் 'டெரீன்' வொர்ஸ்டட் ஸூட்டிங்குகளில் எஸ். குமார்ஸ் வழங்கும் அதிநவீன வண்ணங்கள், டிசைனகள், இழைபோடிய செயவுகள்...தரமான விலையில் சிறப்பான படைப்புகள்.

காலத்தோடு ஒட்டி முன்னேற, 'டெரீன்' மற்றும் 'டெரீன்' இழைபோடிய துணிகளுக்கு நாங்களாகவே விலைக்கான சங்கேத எண்ணை வழங்கினோம். உங்கள் பணத்திற்கேற்ற மதிப்பை நீங்கள் பெற நாங்கள் வழங்கும் உத்தரவாதம். இனிவரும் காலமெல்லாம், உன்னத தரமிகு துணிகளை உகந்த விலையில் தொடர்ந்து வழங்குவோம்காரணம், காலத்தாலும் மாற்றமுடியாத சிறப்பம்சங்கள் உன்னத தரமும் உகந்த விலையும். நாங்களும் மாற்றமாட்டோம். இதுவே எஸ். குமார்ஸ் வழங்கும் வாக்குறுதி. அதி உன்னததரம்...மிகக் குறைந்த விலையில் எஸ். குமார்ஸ்.



**எஸ்.குமார்ஸ்** ®



'டெரீன்' ஸூட்டிங்குகள், ஷர்ட்டிங்குகள் புடவைகள் மற்றும் 'டெரீன்' வொர்ஸ்டட் ஸூட்டிங்குகள்.

எஸ். குமார்ஸ் டெக்ஸ்டைல்ஸ்
பிரைவேட் லிமிடெட்

## அதி உன்னததரம்... மிகக் குறைந்த விலையில்

Sista's-SK-56/77 A-Tam

## 6. அன்னிபெஸண்டும், திலகரும் சுயாட்சி கோருகின்றனர்!

மூன்று வயதான லக்ஷ்மி அவள் தாயாரின் இறுதி நாட்களின் போது அடிக்கடி பேசாமல் இருக்குமாறு கண்டிக்கப்பட்டாள். மங்கா காலமான மறுநாள் காலை வீட்டில் அனைவரும் அழுதுகொண்டிருப்பதைக் கண்ட அவள், ''யாரும் அழக் கூடாது; அம்மாவுக்குத் தொந்தரவாக இருக்கும்'' என்று சொன்னாள். மனைவியின் சிதைக்கு எரியூட்டி விட்டு ஸி.ஆர். வீடு திரும்பியபோது அது 'வெறிச்' சென்று இருப்பதாக அவருக்குத் தோன்றியது.

ஸி. ஆருக்கு வயது முப்பத்தேழு. தமது உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்திக் கொள்ள அவரால் முடியும். தமது குழந்தைகளில் மூத்தவனும் பதின்மூன்று வயதானவனுமான கிருஷ்ணசாமியிடம் அவர் சொன்னார்: ''இனித் தொழிலைக் கவனிக்க எனக்கு நேரம் இருக்கும்.''

ஆனால் அவருக்குள்ளே ஒரு போராட்டம் நடந்து கொண்டிருந்தது. மங்காவின் மரணத்துக்கு முன்பாக அவள் வேதனைப்படுவதைப் பார்த்தும், அதனை நீக்கவோ, அல்லது அதனைப் பகிர்ந்து கொள்ளவோ தம்மால் முடியாமல் இருப்பதைக் கண்டும், எல்லாம் ஆண்டவன் விருப்பப்படி நடக்கும் என்ற நம்பிக்கையை வெறுப்பவரானார் ஸி. ஆர்.[1] சீக்கிரமே அவர் விதியுடன் சமரசம் செய்து கொண்டார். என்றாலும் மங்காவை அவள் இறப்பதற்குப் பத்து நிமிஷங்கள் முன்புதான் நம் மடியிலிருந்து அகற்றினேம் என்ற எண்ணமானது என்றென்றும் அவரை வருத்தி வந்தது.

பத்து நிமிஷங்கள் முன்னதாகத் தமது சகிப்புத் தன்மை உடைந்து போனதற்காக[2] மனிதன் அக்கறையுடன் கவனித்துக் கொள்வதற்கும் ஓர் எல்லை இருப்பதைக் கண்டு அவர் துயருற்றார். ஆனால் அவருடைய நண்பர்களோ ஸி. ஆர். அசாதாரண அளவில் மங்காவுக்காகத் தம்மை அர்ப்பணித்திருப்பதாக உணர்ந்தனர். கிருஷ்ணய்யருக்கு டி. விஜயராகவாச்சார் எழுதினார்: ''கடைசி சில மாதங்களில் ஸி. ஆர். நோயுற்றிருந்த தம் மனைவியிடம் அன்பும் அக்கறையும் கொண்டு கவனித்துப் பணிவிடை செய்தது போல், அவள் நம்பிக்கையும் தைரியமும் பெறும் ஊற்றாக விளங்க ஸி. ஆர். முயன்றது போல் வேறு ஒரு மனிதன் நடந்து கொள்வதை நான் என் வாழ்நாளில் கண்டதில்லை''[3]

தமது குழந்தைகளுக்குத் தாயாராகவும் தந்தையாகவும் ஒருங்கே விளங்க வேண்டிய நிர்ப்பந்தத்துக்கு உள்ளான ஸி. ஆர்., தம் மனத்தில் விழுந்த பலத்த காயத்துக்கு மருந்திடக்கூட நேரமில்லாதவரானார். ராமு என்று அழைக்கப்பட்ட ராமசாமிக்குப் பன்னிரண்டு வயது. குழந்தைகளுள் அவன்தான் மிகவும் பாதிக்கப்பட்டவனாகத் தோன்றினான். இரண்டு வாரங்களுக்கு அவன் வாய் திறந்து பேசுவதே அபூர்வமாக இருந்தது. நல்ல வேளை, குட்டி லக்ஷ்மியின் நிமித்தம் மங்காவின் தாயார் தொடர்ந்து அங்கே தங்கி இருந்தாள். இப்போது ஸி. ஆரின் தகப்பனாரையும் கவனித்துப் பணிவிடை செய்ய வேண்டியிருந்தது. அக்காலத்திய தராதரப்படி அவர் கிழவர்.

ராஜாஜி வாழ்க்கை வரலாறு



### குழந்தைகளின் கல்வி

ஒரு மாறுதலுக்காகக் குழந்தைகளைச் சில காலம் பெங்களூருக்கு அழைத்துப் போன ஸி. ஆர். அவர்கள் கல்வியை விசாலப்படுத்த எண்ணினார். தாயார் இறந்தபோது பாப்பா

---

1. ஸி. ஆர். தேவதாஸ் காந்திக்கு எழுதியது, 4—2—20, தேவதாஸ் காந்தி தாள்கள்.
2. காஸா சுப்பாராவ் எழுதிய கட்டுரையிலிருந்து, சுயராஜ்யா, நவம்பர் 5, 1960.
3. ஆர். வி. கிருஷ்ண அய்யர், கல்கி, டிசம்பர் 8, 1957.

## ராஜ்மோகன் காந்தி.....

வுக்கு ஒன்பது வயது. சேலம் முனிசிபல் பள்ளியின் பெண்கள் பகுதி முதல்வரான ஓர் ஆங்கிலேய மாது சீக்கிரமே சூரமங்கலத்தில் பாப்பாவுக்கு ஓவியப் பயிற்சி அளிக்க அமர்த்தப்பட்டாள். பாவாடை—சொக்காயும், அதன் மேல் ஒரு குட்டைக் 'கோட்'டும் அணிந்து பள்ளிக்கூடம் போய் வந்த பாப்பா, சிறைச்சாலை மேற்பார்வையாளரான ஓர் ஆங்கிலேயரின் வீட்டுக்குப் போய், அவர் மகளிடம் ஆங்கிலத்தில் 'டியூஷன்' எடுத்துக் கொண்டாள்.

வேஷ்டி சட்டையும், வட்ட வடிவக் கறுப்புக் குல்லாயும் அணிந்து பிள்ளைகள் பள்ளிக்கூடம் சென்றார்கள். ராமுவுக்குப் படிப்பு ரொம்பப் பிடித்திருந்தது. ஆபத்துக்கு அஞ்சாத கிருஷ்ணசாமி ஒரு சமயம் அப்பா வீட்டில் இல்லை என்ற தைரியத்தில் எப்படியோ சமாளித்து அவருடைய கைத்துப்பாக்கியைக் கரங்களில் எடுத்தான். புளியம் விருக்ஷத்தின் அடியைக் குறி வைத்து இரு கரங்களின் ஆட்காட்டி விரல்களையும் பயன்படுத்தி மூன்று முறை சுட்டான்.

வீட்டைச் சுற்றித் தாராளமாக இருந்த நிலத்தை நாய்களுடன் சேர்ந்து சிறுவர்கள் குஷியாக அனுபவித்தார்கள். நாய்க்குட்டிகள் வியாதியால் இறந்தபோது வருத்தத்துடன் வீட்டையொட்டி அவை புதைக்கப்பட்டன. அந்த இடத்தைக் குறிக்க ஒரு மரமும் நட்டனர். காவல் நாய், சிவந்த பழுப்பு நிற உடலும், கரிய நுனிவாயும் உடைய கோம்பை மீது ஒரு மாட்டு வண்டி ஏறிவிட்டது. அதனைக் கொன்றுவிட வேண்டியதாயிற்று. "நாய்க்கு ஆஸ்பத்திரியில் கருணை காட்டப்பட்டது" என்று கிருஷ்ணசாமியிடம் ஸி. ஆர். கூறினார்.[4]



திலகர் >



அன்னிபெசன்ட் v

தன் கணவர் உடல் நலம் பெற்ற நாளிலிருந்து அநேகமாகத் தொடர்ந்து நோயுற்றே இருந்து வந்த மங்கா வேங்கடாசலபதிக்குத் தன் வேண்டுதலை நிறைவேற்று முன்னரே இறந்து விட்டாள். அவள் சென்ற பிறகு ஸி. ஆர். பிரார்த்தனையைப் பகுதி அளவில் நிறைவேற்றினார். கிருஷ்ணசாமியையும் ராமசாமியையும் அவர்கள் உபநயனத்தை நடத்தத் திருப்பதிக்கு அழைத்துச் சென்ற மங்காவின் நகைகளில் சிலவற்றை அங்கே காணிக்கையாக்கிவிட்டு வந்தார். (மங்காவின் இதர நகைகள் குடும்பத்தில் தங்கவுமில்லை. விதிவசமாகப் பெருமாள் என்று பெயர் கொண்ட ஒருவேலைக்காரன் வந்து சேர்ந்தான். 1921ல் அவன், இதற்குள் திருமணம் செய்து கொண்டு விட்டிருந்த நாமகிரியிடம் இருந்த மதிப்பு மிக்க பொருள்களை எடுத்துக்கொண்டு போய்விட்டான். அவற்றுள் நாமகிரியின் தாயாருடைய நகைகளும் இருந்தன[5]).

### "ஆறுவது குழந்தை வேண்டாம்"

மங்கா காலமாகி ஓராண்டுக்குப் பிறகு ஐயங்காரான ஸி. ஆரின் கட்சிக்காரரான ஒருவர் தமது மகளை ஸி. ஆர். மணந்துகொள்வாரா என்று கேட்டார். மனைவியை இழந்தவர்கள் மறுமணம் செய்து கொள்வது சகஜம்தான் என்றாலும், ஸி. ஆர். அந்த யோசனையை ஏற்காததுடன் கடுமையாகவும் பேசினார்:

"எனக்கு ஐந்து குழந்தைகள் போதும். ஆறுவதாக ஒரு குழந்தைக்குப் பொறுப்பேற்க நான் விரும்பவில்லை" என்று பதிலளித்தார். முடிவாகப் பேசிய அவர் குரலில் கோபமும் தொனித்தது: "நான் மறுமணம் புரிந்து கொள்ளப் போவதில்லை."[6]

உண்மை என்னவெனில் இளம் மனைவியின் மரணம் என்ற ரூபத்தில் ஸி. ஆர். மீது விழுந்த அடி, அவர் சிரத்தை எடுத்துக்கொள்கிற அம்சங்களைக் குறுக்கிவிடவில்லை. மாறாக அவர் ஆத்மா விசாலம் அடைந்தது. இனி அவர் வீட்டின் சுவர்களுக்குள்ளே குடும்பப் பொறுப்புக்களில் அல்லாது அரசியல் ஈடுபாட்டிலேயே அதிகமான திருப்தி காண்பார்.

● ● ●

இதற்கிடையில் யுத்தம் தொடர்ந்தது. பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்துக்கு ஆதரவு தருவது அவசியம் என்று கருதிய திலகர் விசுவாச

---

4. ஸி. ஆர். கிருஷ்ணசாமி நூலாசிரியரிடம் கூறியது.
5. நாமகிரி அம்மாள் நூலாசிரியரிடம் கூறியது.
6. மேற்படி.



**செஸ் ரிகார்டு!**

செக்கோஸ்லோவியாவில் செஸ் கிராண்ட் மாஸ்டர் வ்ளாஸ்டிமில் ஹார்ட் 550 செஸ், ஆட்டக்காரர்களை எதிர்த்து ஆடி ஒரு புதிய ரிகார்டை ஸ்தாபித்தார்.

வ்ளாஸ்டிமில் ஹார்ட் இந்தப் போட்டிகளில் 477 ஆட்டங்களில் வெற்றி பெற்றார்; 63 ஆட்டங்களில் 'டிரா'வில் முடிந்தன. 10 ஆட்டங்களில் மட்டுமே தோல்வியுற்றார். டெக்கான் ஹெரால்ட் -பி.எஸ்.எம்.

அறிக்கை ஒன்றை வெளியிட்டார். மாண்டலேயில் தாம் பட்ட கஷ்டங்கள் பற்றி அவர் மௌனம் சாதித்தது வி.ஆரை உருக்கி விட்டது.

யுத்தம் தொடங்கியபோது காந்தி தென் ஆப்பிரிக்காவிலிருந்து இந்தியாவுக்கு வரும் வழியில் லண்டனில் இருந்தார். ''மாபெரும் சாம்ராஜ்யத்தின் உரிமைகளைப் பகிர்ந்து கொள்ள இந்தியர்கள் விரும்பினால், அதன் பொறுப்புக்களையும் அவர்கள் பகிர்ந்து கொள்ள வேண்டும்''7 என்று கூறிய அவர் இந்தியர்கள் அடங்கிய நடமாடும் மருத்துவ மனைப் படையொன்றை லண்டனில் உருவாக்கினார்.

பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தைக் காக்க இந்தியப் படைகள் போராடின. இந்தியா முழுவதுமிருந்த பள்ளிச் சிறுமிகள் படையினருக்காக ஸ்வெட்டர்கள் பின்னுமாறு கோரப்பட்டனர். சேலத்தில் பாப்பாவும் அப்பணியில் ஈடுபட்டாள். 1914–15ல் பிரான்ஸிலும் ஃபிளாரன்ஸிலும் (பின்னால் பிரிவுபட்ட பெல்ஜியம், பிரான்ஸ், ஹாலந்து ஆகிய நாடுகளுடன் இணைந்துவிட்ட சிற்றரசு) நடந்த குளிர்கால யுத்தங்களில் பழுப்பு நிற சிப்பாய்கள் தாக்குப் பிடித்ததானது பாராட்டுப் பெற்றது. எனினும் இந்தியாவுக்குள்ளே அரசியல் உரிமைகளை விரிவுபடுத்த விரும்பினவர்களுக்குக் கண்டிப்பான கட்டுப்பாடுகளைப் புதிய இந்தியா பாதுகாப்புச் சட்டம் விதித்தது.

## சுயாட்சி இயக்கம்

இங்கிலாந்தின் யுத்த ரீதியான கஷ்டங்களில் இந்தியாவுக்கு ஓர் அரசியல் வாய்ப்பு இருப்பதைக் கண்ட திலகர், ஒரு பேரம் நடத்த முற்பட்டார்: (மேன்மை தங்கிய மன்னர் பிரானின் தொடர்பு நீடிக்கிற) சுயாட்சி உரிமை வழங்குவதாக வாக்குறுதி தந்தால் பிரிட்டன் சார்பில் போராட ஏராளமான இந்தியர்கள் படை வீரர்களாவார்கள். இந்தியாவின் வாதாடும் நிலையைப் பலப்படுத்திக் கொள்ள அவர் ஏப்ரல் 1916ல் சுயாட்சி சங்கத்தை (ஹோம் ரூல் லீக்)த் தோற்றுவித்தார்.

தீவிரவாதியான ஐரிஷ் மாது அன்னி பெஸண்டும் இதே போன்ற கருத்துக்களைக் கொண்டிருந்தார். இவர் இந்தியாவைத் தமது குடியேற்ற நாடாக்கிக் கொண்டு இந்தியர்களின் விடுதலையையே தமது லட்சியமாக்கிக் கொண்டும் இருந்தார். திலகருடன் கருத்தொன்றி, ஆனால் தனியே இயங்கிய இவரும் ஒரு சுயாட்சி சங்கத்தைத் தோற்றுவித்தார்.

மிதவாதிகள் காங்கிரஸ் தலைவர்கள் கோகலேயும் ஃபிரோஸ்ஷா மேத்தாவும் 1915ல் இறந்துவிட்டார்கள். அடுத்த இரு ஆண்டுகளில் பொங்கிப் பிரவகிக்கும் சக்தியுடன் அன்னிபெஸண்டும் உடல் பலவீனமடைந்திருந்தாலும் உள்ளத்தில் உறுதியுடனிருந்த திலகரும் ஜனத் திரள்களின் சிந்தனைகளைக் கவர்ந்து, அரசியல் அரங்கை ஆக்கிரமித்துக் கொண்டிருந்தனர்.

காந்தி கிராமப்புறத்தில் இருந்தார். தமது விசித்திரமான விதைகளை ஊன்றிக் கொண்டிருந்தார். அவை தென்னாப்பிரிக்காவில் முளை விட்டன. இந்திய மண்ணில் பலன் கிடைக்குமா? பயிர் விளையும் என்று முதலில் உணர்ந்த இந்தியர்களுள் வி. ஆரும் ஒருவர்.

1916 பிப்ரவரி அல்லது மார்ச்சில், ''எம். கே. காந்தி – இந்தியாவுக்கு அவர் விடுக்கும் செய்தி'' என்ற தலைப்பில் அவர் எழுதிய கட்டுரை இதனை மெய்ப்பிக்கிறது. திலகரையும் அன்னி பெஸண்டையும் போலன்றி காந்தி, நிபந்தனை ஏதுமற்ற விதத்தில் யுத்தத்தின்போது சாம்ராஜ்யத்துக்கு இந்தியா உதவ வேண்டும் என்றார். இது தீவிரவாதிகள் பெரும்பாலோரை ஏமாற்றத்துக்குள்ளாக்கியது. மிதவாதிகளை விட மிதவாதியாகக் காந்தி அவர்களுக்குத் தோற்றமளித்தார்.

ஆனால் வி. ஆர். அப்படி எண்ணவில்லை. காந்தியின் விசுவாசக் கருத்து, ஆட்சியின் அல்லது அரசின் நேர்மையற்ற போக்குகளை ஒப்புக்கொள்வதை உள்ளடக்கியதல்ல என்பதை அவர் இனம் கண்டு கொண்டிருந்தார்.8 ஓர் அநீதியை எதிர்ப்பது என்று காந்தி தீர்மானித்து விட்டாரானால் அவர், தீவிரவாதிகள் உள்ளிட்ட வேறு யாரையும் விடத் தீவிரமாகப் போராடுவார் என்பதை வி. ஆர். உணர்ந்தவராகக் காணப்பட்டார்.

பிரிட்டிஷ் ஆட்சியின் விளைவாக இந்தியாவுக்குக் கிடைத்துள்ள உண்மையானதும் கற்பனையானதுமான நலன்கள் இந்தியர்கள் மீது குவிக்கப்பட்டுள்ள அகௌரவங்களைக் காந்தியின் கண்களிலிருந்து மறைத்து விடவில்லை என்று வி.ஆர். எடுத்துக் காட்டினார். வெளியிலிருந்து வரும் உதவி என்னும் பாதுகாப்பை ஏற்பதன் மூலம் இந்தியா பேடியாகித் தனக்குத் தானே உதவிக் கொள்ள லாயக்கற்றுப் போய்விடுவதைக் காந்தி வெறுத்தார். மேலும் அவர் பிரிட்டிஷ் ஆட்சியின் புற வெளிப்பாடுகளை மட்டுமின்றி

7. டெண்டுல்கர், மகாத்மா, பம்பாய், 1951, முதல் பாகம், பக்கம் 188.
8. இதுவும் இதைத் தொடர்ந்துவரும் காந்தி பற்றிய வி. ஆரின் கருத்துக்களும் சேலம் இலக்கியச் சங்கத்தில் வி. ஆர். தயாரித்துப் படித்த கட்டுரையிலிருந்து எடுக்கப்பட்டவை. M. K. Gandhi — His message to India என்ற தலைப்பில் வி. ஆர். எழுதிய இக்கட்டுரை சென்னை, இந்தியன் ரெவ்யு, மே 1966 இதழிலும் பிரசுரமாயிற்று.

# ஹார்லிக்ஸ்

## ஒவ்வொரு நாளும் ஆரோக்கியத்தைப் பாதுகாத்து, எதிர்ப்புச் சக்தியை வளர்க்கும் ஊட்டச் சக்தி.

ஒவ்வொரு நாளும் ஹார்லிக்ஸ் அருந்தினால், அது உங்கள் குடும்பத்தினருக்கு எதிர்ப்புச் சக்தியை வளர்க்கும் ஊட்டச் சக்தியை அளித்து, அவர்களை பூரண ஆரோக்கியத்துடன் விளங்கச் செய்கிறது.

உலகமெங்கிலும் டாக்டர்களால் சிபாரிசு செய்யப்படுவது ஹார்லிக்ஸ் ஒன்றுதான். தனிச்சிறப்பு மிக்க ஹார்லிக்ஸ் செய்முறை, ஹார்லிக்ஸில் அடங்கியுள்ள சத்துமிக்க, சுத்தமான பொருள்களை கலக்கும்பொழுது, அவற்றிலுள்ள இயற்கையான, நல்ல தன்மைகளை நிறுத்தி, அவற்றை எளிதில் ஜீரணிக்க வகை செய்கிறது. அதனால், மிகுந்த அளவில் ஊட்டச்சக்தியை அளிப்பதும் ஹார்லிக்ஸ் ஒன்றுதான்.

அதனாலேயே, சுசித்ரா ஹார்லிக்ஸை தனது குடும்பத்தினரது வாழ்க்கையின் ஒரு அம்சமாக்கி இருக்கிறாள்.

சுசித்ராவைப் போன்றே, உங்கள் குடும்பத்தினருக்கும் ஒவ்வொரு நாளும் ஹார்லிக்ஸ் அளித்து, அவர்கள் ஆரோக்கியமாகவும், வலுவுடனும் வளருவதைக் கவனியுங்கள்.

"ஊட்டச்சக்திக்கு ஹார்லிக்ஸ் ஒரு முக்கியமான மூலப்பொருள். உங்களுடைய குடும்பத்தினரின் எதிர்ப்புச் சக்தியை வளர்க்கவும், அவர்களை ஒவ்வொரு நாளும் ஆரோக்கியமாக வைத்திருக்கவும் நான் ஹார்லிக்ஸையே சிபார்சு செய்கிறேன்"



**ஹார்லிக்ஸ்** முழுமையான ஊட்டம்பெற

# ஒரு கேசச் சாயத்தில் நீங்கள் எதிர்பார்ப்பவை எவை?

## குறித்துக் கொள்க :

☐ இயற்கைப் பொலிவு தருதல் ☐ எளிதில் பரவுதல்
☐ நீடித்திருத்தல் ☐ ஷாம்பூவாகவும் பயன்படுதல்
☐ உள்ளடங்கிய கேச கண்டிஷனர் ☐ விரைவில் பூசமுடிதல்
☐ நறுமணம் ☐ அதிகப்படி சாயத்தைக் கழுவுதலில் எளிமை.

புதிய

# நேச்சுரீன்

**உண்மையான ஷாம்ப்பூ-இன் கேசச்சாயம்.**

## இவையனைத்தும் தரும்— இன்னும் தரும்.

**நிகரற்ற நறுமணம்**
மிகவும் மிகவும் இனிய மணம்—செடியுள்ள. செயற்கை மணமல்ல

**சிந்தல் இல்லை சிதறல் இல்லை**
பூசுதற்கோ மிக எளிது

**தனித்த கேச கண்டிஷனர்**
நேச்சுரீனில் மட்டுமே இருக்கிறது 'அமைட்'—ஒரு கண்டிஷனர். தனிப்பட்ட முறையில் ஹெலீன கர்ட்டிஸ் உருவாக்கியது; கேசத்தை மென்மையாகவும் படிந்தும் இருக்கச் செய்கிறது.

**உறையிலே அதிக அளவு பொருள்—**
உங்கள் பணத்திற்கு 25% அதி மதிப்பு. ஒருமுறை முயல்வீர்—எனி ஷாம்பூ-இன் கேசச்சாயம் எதும் விரும்பமாட்டீர்!






இயல்பான கருப்பு மற்றும் கரும்பழுப்பு நிறங்களில் கிடைக்கும்—ஆண், பெண் இரு பாலாருக்கும்.

கேச பராமரிப்பில் உலகில் நிலையாய ஹெலீன கர்ட்டிஸ் உறுதியளிக்கிறது.

நேச்சுரீன்—ஜப்பான் மற்றும் அமெரிக்காவில் உடனடி வெற்றிகண்ட கேசச் சாயம்.

இவ்விடம் விசாரிக்கவும் : **பாரி அண்டு கோ. லிட்.**, சென்னை, கோவை, திருச்சி, மதுரை, சிக்கந்திராபாத், விஜயவாடா, விசாகப்பட்டினம், கோழிக்கோடு, கொச்சி, பங்களூர், மங்களூர்.

அதன் மூல பலத்தை எதிர்க்கத் தயாராயிருந்தார். அந்த மூல பலம் பேராசைக்கும் சுகபோகத்துக்கும் முக்கியத்துவம் கொடுத்த ஒரு நாகரிகமே.

காந்தியின் சிந்தனைப் போக்கைப் பின்வருமாறு வி. ஆர். மேலும் விளக்கினார்.

''ஆங்கிலேயரைக் குறை கூறிப் பிரயோஜனமில்லை. அவர்கள் வருவதும் இருப்பதும் நம்மால்தான். அவர்களது நாகரிகத்தை நாம் ஏற்பதன் மூலம் அவர்களையும் நம்முடன் இருத்திக் கொள்கிறோம். ஒன்று விட்ட சகோதரர்கள் போல் விளங்கும் இந்திய வழக்கறிஞர்கள், நீதிபதிகள், போலீஸ்காரர்கள் ஆகியோர் காரணமாகத்தான் அன்னியர் ஆட்சி சாத்தியமாகிறது.

''பிரச்னை தீர வழி, இறக்குமதியான நாகரிகத்தை விரட்டி யடிப்பதுதான். அதே நேரத்தில், பால்ய விவாகங்கள், சிறுமித் தாய்மார்கள், குழந்தைக் கைம்பெண்கள், பலதாரத் திருமணங்கள், மதத்தின் பெயரால் விபசாரம், மிருகங்களைப் பலியிடுதல் போன்றவை நமது நாகரிகத்தைச் சேர்ந்தவையல்ல என்பதையும் நினைவில் கொள்ள வேண்டும்.''

இதெல்லாவற்றுக்கும் மேலாக காந்தி, (காந்தியைக் குறிப்பிடும்போதெல்லாம் திருவாளர் காந்தி என்றே அக்கட்டுரையில் வி. ஆர். எழுதினார்.) அந்நியான சுத்தாவுகளையும் மனச் சாட்சிக்கு அருவருப்பான சட்டங்களையும் புறக்கணிக்கவும் இவற்றை மீறுவதால் கிடைக்கும் தண்டனையை ஏற்கவும் தயாராக இருந்தார் என்பதை வி. ஆர். சுட்டிக் காட்டினார். இவை வாய் கிழியப் பேசும் எந்தத் தீவிரவாதியும் செய்ய எண்ணுதவை. அதே நேரத்தில் இவை எந்த மிதவாதியும் மனம் வைத்தால் செய்யக் கூடியவை.

### ஆன்ம சக்தி

''உறுதியுடனிருந்து கஷ்டப்படவும் தயாரானால் மனிதனுடைய மனோபலத்துக்கு எல்லையே கிடையாது என்று தென்னாப்பிரிக்காவில் காந்தி செயலாற்றிக் காட்டியிருந்தார். கஷ்டங்களை மகிழ்ச்சியுடன் வரவேற்கும் ஆன்ம பலத்தை ஆயுத பலத்துக்கு எதிராக நிறுத்தி வைக்கும் இந்த அணுகுமுறையை இந்தியர்கள் கையாள்வதா இல்லையா என்பது மிகப் பெரிய கேள்வி. அது பற்றி ஏதேனும் ஒரு கட்டத்தில் யோசித்துப் பார்த்தேயாக வேண்டும்.''

காந்தியைப் பற்றி இத்தகைய ஆழ்ந்த நம்பிக்கைகளை வி. ஆர். 1916ம் ஆண்டின் தொடக்கத்திலேயே வெளியிட்டார்:

(தொடரும்)



பொன்னியின் புதல்வர் பெயரால் ஆண்டு தோறும் நடைபெறும் இச் சிறுகதைப் போட்டிக்குப் பொன்னான சிறுகதைகளை வரவேற்கிறோம். இளம் எழுத்தாளர்களின் புதுமைப் படைப்புக்களுடன் பிரபல எழுத்தாளர்களின் சீரிய படைப்புக்களையும் எதிர்பார்க்கிறோம். மர்மக் கதை, சமூகக் கதை, புராணக் கதை, சரித்திரக் கதை, நகைச்சுவைக் கதை, கிராமச் சூழல் கதை, பிரச்னைக் கதை போன்ற எதுவாக வேணுமானாலும் இருக்கலாம். கதைக்காகவே எழுதப்பட்ட கதையாகவும் இருக்கலாம்.

இலக்கிய நயத்துடன் அமையும் சிறந்த கதைகளுக்குப் பின்வருமாறு பரிசுகள் வழங்க உத்தேசித்திருக்கிறோம்.

| | |
|---|---|
| **முதல் பரிசு** | **ரூ. 1000/-** |
| **இரண்டாம் பரிசு** | **ரூ. 500/-** |
| **மூன்றாம் பரிசு** | **ரூ. 500/-** |

**(தலா ரூ. 250 வீதம் இரு கதைகளுக்கு)**

தவிர, பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ. 100 பரிசு பெறும்.

**முடிவு தேதி: ஜூன் 15உ**

நிபந்தனைகள்: சிறுகதைகளைத் திரும்பப் பெறப் போதிய அளவு தபால் தலை பதித்த சுய விலாசமிட்ட உறைகளை அனுப்புதல் வேண்டும். ○ சிறுகதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேல் போகாமல் அமைவது நலம். ○ கடிதப் போக்குவரத்து கிடையாது. ○ கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது. ○ உறையின் மேல் அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி என்று குறிப்பிடுதல் அவசியம்.

ஆசிரியர், கல்கி, சென்னை – 600031





அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி

# த



த
குதிரையின் கனைப்பைக்
குறிக்கிறது

பழைய கால மரபு இக்காலத்திய தரமாக ஏற்றம் பெறுகிறது!

இந்தியக் கலாசாரத்திற்கு எடுத்துக் காட்டாய் விளங்கும் கர்நாடக இசையும் ஹிந்துஸ்தான் சங்கீதமும் பொதுவாக இசைத்துறையின் பல சிறப்புகளைக் கொண்டவை. இந்த இசை கேள்வி ஞானத்திலே தலைமுறைத் தலைமுறையாக வந்தது.

இதைப்போலவே தாவண்கெரேயில் எங்கள் ஆலையில் தயாரிக்கப்படும் துணிகளின் தரம் பாரம்பரியமானது. மாறாத தரங் கொண்டவை. பருத்தி முதல் மென்மையம் மிகுந்த வகைகள் வரை, தாவண்கெரேயில் தரத்திலே சிறந்த இழை நயங்களில் மேம்பாடான துணிவகைகள் தயாரிக்கப் படுகின்றன. கொடுக்கும் பணத்திற்குக் கூடுதலான மதிப்பைத் தரவல்லவை.

MONSIEUR மான்ஸூர்-டெரின் காட்டன் சூட்டிங்

RAMSON ராம்ஸன்-டெரின் காட்டன் சூட்டிங்

DAVARIN தாவரின்-டெரின் காட்டன் ஷர்ட்டிங்

'டெரின்'—கே.பியின் ரெஜிஸ்டர்ட் ட்ரேட்மார்க்




# தாவண்கெரே

என்றும் சிறந்தமாயுள்ள தரம்

தி தாவண்கெரே காட்டன் மில்ஸ் லிமிடெட், தாவண்கெரே, கர்நாடக மாநிலம்.

THOMAS/DCM/676/Tam

**க**ல்கி நேயர் திரு எஸ். ராமமூர்த்தி காசி க்ஷேத்திரத்திலிருந்து நமக்கு ஒரு கடிதம் எழுதி யிருந்தார்:

''கல்கியில், ''காசி சுப்ரபாதம்'' இசைத் தட்டு இராமநவமியன்று காசியில் வெளி யிடப்படும் என்றும் அச்சமயம் ஸ்ரீமதி எம். எஸ். காசி வருவார் என்றும் படித்தேன். அதிருஷ்ட வசமாக அதே சமயம் அலுவலக வேலையாகக் காசி செல்லும் வாய்ப்புக் கிட்டியது.

மார்ச் 29ந் தேதி காலை விசுவநாதர் கோயிலை நானும் நண்பரும் அடையும்போது மணி 3-30. கோயிலை நாங்கள் அடையும் முன்பே ஸ்ரீமதி எம். எஸ். ''சுப்ரபாதம்'' பாட ஆரம்பித்து விட்டார். அமைதியான சூழ்நிலை. அந்த அதிகாலை நேரத்திலும் நூறு பேருக்கு மேல் கூடிவிட்டனர். விசுவநாதர் கர்ப்பக்கிரகத்துக்கு முன்னால் ஸ்ரீ சதாசிவம் அவர்கள் தரையில் அமர்ந்து மெய்மறந்து இருந்தார்கள். எம். எஸ்ஸும், ராதாவும் நின்றபடி உள்ளமுருக சுப்ரபாதம் பாடி னார்கள். எங்கும் ஒரே தெய்விக உணர்வு; மெய்சிலிர்த்து நின்றேன்.

''சுப்ரபாதம்'' முடிந்ததும் சதாசிவம் தம் பதிகள் கர்ப்பக்கிருகத்தினுள் சென்றார்கள். விசுவநாதர் முன் அமர்ந்து ஆதி சங்கரர் அருளிய ''சிவ பஞ்சாக்ஷர'' துதியை எம்.எஸ். பாடினார். பின்னர் சதாசிவம், எம். எஸ். இருவரும் சேர்ந்து விசுவநாதருக்குக் கங்கா ஜலத்தால் அபிஷேகம் செய்து பூமாலை போட்டார்கள். பிரசாதம் பெற்று அவர்கள் எழுந்த பொழுது, ஆரம்ப முதலே மிகவும் பரபரப்பாக இருந்த ஓர் இளைஞர் உணர்ச்சி வசப்பட்டு, பேச முடியாமல், ''என்னுடைய கனவு நிறைவேறி விட்டது....அம்மா..... அம்மா...'' என்று இந்தியில் எம்.எஸ்.ஸிடம் தழு தழுக்கக் கூறினார். அவருடைய முயற்சி யால்தான் எம். எஸ்.ஸின் காசி சுப்ரபாதம் இசைத்தட்டு வெளிவந்தது என்றும் அவர் பெயர் ராஜ்கிஷோர் குப்தா என்றும் பின்னும் அறிந்து கொண்டேன்.

## ஆன்மிகத் தலைநகரில் ஆனந்த வைபவம்









○ காசியில் பத்மபூஷண் டாகுர் ஜயதேவ் சிங் ஸ்ரீமதி எம். எஸ். சுப்பு லக்ஷ்மிக்கு நாகாபரண பஞ்ச முக லிங்கத்தைப் பரிசாக வழங்குகிறார்.

○ ஸ்ரீ சதாசிவம் அவர் களுக்குப் பொன்னாடை போர்த்தி அருமையான வேலைப்பாடமைந்த கமண்டலுவைச் சுப்ரபாத சமிதியின் சார்பாக அதன் அமைப்பாளர் ஸ்ரீ ராஜ்கிஷோர் குப்தா வழங்குகிறார்.

○ சுப்ரபாதம் இசைத் தட்டு வெளியீட்டு விழா காசி மன்னர் தலைமையில் நடைபெறுகிறது.

பின்னர் எம். எஸ். தம் குழுவினருடன் அன்னபூரணி கோவிலுக்கும் என் நண்பருடன் சென்றேன். அங்கு கோயில் மகந்த் (நம் பக்கத்து மடாதிபதி போன்றவர்) எம். எஸ். குழுவினரைக் கர்ப்பக்கிருகத்தினுள் அழைத்துச் சென்றார். அங்கு அன்னை அன்னபூரணி சந்நிதியில் எம். எஸ். ஆசாரிய பகவத்பாதாளின் ''அன்னபூர்ணஷ்டகத்தை''த் தம்மை மறந்து உள்ளமுருகிப் பாடி, கேட்போர் அனைவரையும் பக்திப் பரவசமடையும் படி செய்தார்.''

காசி கோயில்களில் நடந்தவற்றைப் படம் பிடித்துக் காட்டியுள்ளார் திரு ராமமூர்த்தி மது கடிதத்தில். அவர் கூறாத இதர நிகழ்ச்சிகளையும் சுருக்கமாகப் பார்ப்போம்.

ஸ்ரீ சதாசிவம் தம்பதி ஏறியிருந்த புதிய கங்கா — காவிரி எக்ஸ்பிரஸ் வாரணாசி ரயில் நிலையத்துக்குள் நுழைந்தபோது ஏரே கோலாகலமாக இருந்தது. அவர்களை வரவேற்று அழைத்துப் போக ரசிகப் பெருமக்களும் நகரப் பிரமுகர்களும் கூடியிருந்தனர்.

மறுநாள் காசி மகாராஜா தமது மனைவி பார்தாவில் இருப்பதால் அரண்மனையில் ஸ்ரீமதி எம். எஸ். சற்று நேரம் பாடிவிட்டு அதன் பிறகு விருந்துபசாரத்தை ஏற்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்.

அந்த அழைப்புக்கிணங்கி ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மியும் ஸ்ரீமதி ராதா விசுவநாதனும் தர்பார் மண்டபத்தில் பாடினர். மகாராஜா உள்பட அனைவரும் கம்பளம் விரித்த தரையில் அமர்ந்து கேட்டனர். சிவ பஞ்சாக்ஷரஸ்தோத்திரத்துடன் ஸ்ரீமதி எம். எஸ். அன்றைய நிகழ்ச்சியை முடித்த போது மகாராஜா உள்ளம் நெகிழ்ந்தவராக ஸ்ரீமதி எம். எஸ். அதனை இன்னொரு தடவை பாடலாமா என்று ஸ்ரீ சதாசிவத்தைக் கேட்டுக் கொண்டார். ஸ்ரீமதி எம். எஸ். உடனே அதற்கு இசைந்து பாடி மகிழ்வித்தார்.





○ சென்னை கபாலீசுவரர் ஆலயத்தில் தமிழக ஆளுநர் ஸ்ரீ மோகன்லால் சுகாடியா, சுப்ரபாத இசைத் தட்டை ஸ்ரீ சைதன்ய சுப்ரமணிய ஐயர் அவர்களுக்கு வழங்கினார். வரவேற்புரை: ஏ. வி. எம்.

○ நாகபுரி, பாரதீய வித்யாபவனின் ஆதரவில் ஸ்ரீமதி சித்திரலேகா தேவி பான்ஸ்லேயின் தலைமையில் முன்னாள் நீதிபதி நியோகி வெளியிட, ஸ்ரீமதி ஆஷாதேவி மகேஸ்வரி இசைத் தட்டைப் பெற்றார்.

○ பம்பாயில், தென்னிந்திய பஜனசமாஜம், சங்கர மடம் இவற்றின் ஆதரவில், பேராசிரியர் ஸ்ரீ. டி. வி. ராமாநுஜம் தலைமையில் சின்மயா மிஷன், ஸ்வாமி தயானந்தசரஸ்வதி வெளியிட்டார். நன்றியுரை:கிராமபோன் கம்பெனி மானேஜிங் டைரக்டர் ஸ்ரீ அநில் சூத்.

○ பங்களூர், கோகலே இன்ஸ்டிடியூட்டில், கர்நாடக மாநில ஆளுநர் ஸ்ரீ உமாசங்கர் தீக்ஷித் தலைமை தாங்க, பண்டிதராஜ் ஸ்ரீ வி. எஸ். ராமச்சந்திர சாஸ்திரிகள், நிட்டூர் ஸ்ரீநிவாச ராவ், கோரூர் ஸ்ரீ ராமஸ்வாமி ஐயங்கார் ஆகியோர் பங்கு கொண்டனர்.





ராமநவமியன்று சம்ஸ்கிருத பல்கலைக் கழகத்தின் மத்திய அரங்கத்தில் இசைத்தட்டு வெளியீட்டு விழா நடந்தது. சூழ்நிலையே பக்தி மயமாக இருந்தது. அரங்கத்துக்குள் நுழையும் போதே வேத கோஷங்கள் கேட்டன. காசி மகாராஜா வரும் போது ''ஹர ஹர மகாதேவ்'' என்ற ஒலி விண்ணை நிறைத்தது. வேத பண்டிதர்கள், சமஸ்கிருத அறிஞர்கள், இசை விற்பன்னர்கள், இரு பல்கலைக் கழகத் துணைவேந்தர்கள் இதர பல துறைகளில் முன்னணியிலிருக்கும் வாராணசி வாசிகள் கூடியிருந்த அந்த அவையில் ஸ்ரீ சதாசிவம் தம்பதிக்குப் பூர்ணகும்ப மரியாதை அளிக்கப்பட்டது.

மகாராஜா பேசுவதற்கு முன்பு ஸ்ரீ சதாசிவத்தைச் சில வார்த்தைகள் கூறுமாறு கோரினார். காசி-ராமேசுவரம் சுப்ரபாதம் இசைத் தட்டில் பதிவானதன் மூலம் வாழ்க்கைப் பயனையே பெற்று விட்டதாகத் தாமும் தமது மனைவியும் கருதுவதாகவும், ஓய்வெடுத்துக் கொண்டு காசி க்ஷேத்திரத்திலேயே தங்கி விட விரும்புவதாகவும் கூறினார். மேலும் ஸ்ரீ சதாசிவம், புதுதில்லி எப்படி பாரத நாட்டின் இன்றைய அரசியல் தலைநகராக விளங்குகிறதோ, அப்படி காசி க்ஷேத்திரம் பாரதத்தின் ஆன்மீகத் தலைநகராகத் தொன்று தொட்டு விளங்குகிறது; தில்லி போலவே காசியும் ஒரு தனி ராஜ்யமாகவும் சமஸ்கிருதம் அதன் ஆட்சி மொழியாகவும் வேண்டும் என்று கருத்து தெரிவித்தார்.

இதன் பிறகு பேசிய காசி மகாராஜா ஸ்ரீ சதாசிவத்தின் இரண்டாவது யோசனையைத் தாம் முழுமனத்துடன் ஆமோதிப்பதாகக்கூறி அதற்கு எடுத்துக் காட்டாக போப்பாண்டவரின் ஆட்சியில் உள்ள 'வாடிகன்' அரசைச் சுட்டிக் காட்டினார். ஆனால் ஸ்ரீ சதாசிவத்தின் முதல் யோசனையைத் தம்மால் ஒப்புக்கொள்ள முடியாது என்று கூறி விட்டார் காசி மகா



○ கல்கத்தா, பிர்லா அகாடெமி ஹாலில் ஜஸ்டிஸ் என். பி. முகர்ஜி தலைமை தாங்க ஸ்ரீ கிரிதாரிலால் மேத்தாவும் டாக்டர் என். ஆர். ஸ்ரீனிவாசனும் கலந்து கொண்டனர்.

○ ஹைதராபாத், பாரதீய வித்யா பவனில் நீதிபதி ஸ்ரீ அல்லாடி குப்புஸ்வாமி அவர்களது தலைமையில் ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்து ஸ்வாமி ரங்கநாதாநந்தர் வெளியிட்டார். டாக்டர் நிவாகர்லா வேங்கடவரதனியும், ஸ்ரீ ராமராவ் மசேர்லாவும் பங்கு கொண்டனர்.



○ கோழிக்கோடு, சத்குரு சங்கீத சபையின் ஆதரவில், டாகூர் நூற்றாண்டு விழா அரங்கில், கே.பி. கேசவமேனன் தலைமை தாங்கி வெளியிட்டார். வானொலி நிலைய டைரக்டர் திரு நரேந்திர நாத் முதல் இசைத் தட்டைப் பெற்றுக் கொண்டார்.

○ தில்லி, பாரதீய வித்யா பவனில் சுப்ரீம் கோர்ட்டு முன்னாள் தலைமை நீதிபதி கஜேந்திர கட்கர், ஹரியானா கவர்னர் ஸ்ரீ ஜயசுக்லால் ஹாத்தியின் தலைமையில் சுப்ரபாதம் இசைத்தட்டை வெளியிட்டார்.







○ ராமேசுவரத்தில், ஸ்ரீ ராமநாத ஸ்வாமி ஆலயத்தில், ராமநாதபுரம் சேதுபதி ராஜா வெளியிட, ஸ்ரீ ராமேசுவர சுப்ரபாதம் இயற்றிய கவிகோகில டாக்டர் வே. ராகவன் அவர்களே முதல் இசைத் தட்டைப் பெற்றுக் கொள்கிறார்.

ராஜா. ''ஸ்ரீமதி எம். எஸ்ஸுக்கும் உங்களுக்கும் இன்னும் எவ்வளவோ பணிகள் காத்திருக்கின்றன; நற்பணிகள் தொடரட்டும். பொது வாழ்வில் இருப்பவர்கள் எப்போது ஓய்வு பெறலாம் என்பதை அவர்களே நிர்ணயிக்க முடியாது. மற்றவர்கள்தாம் நிர்ணயிக்க வேண்டும்'' என்று சொன்னார். ஸ்ரீமதி எம். எஸ். அவர்களைப் பார்த்து, ''நீங்கள் உலகில் எத்தனையோ பேர்களிடம் பாராட்டுப் பெற்றிருக்கலாம். ஆனால் காசியிலுள்ள மகாபண்டிதர்களின் பாராட்டு அத்தனை எளிதில் கிடைப்பதல்ல. அவர்களுடைய மனப்பூர்வமான பாராட்டும் இன்று உங்களுக்குக் கிடைத்துப் பாக்கியசாலியானீர்கள்'' என்றார். அதைப் பண்டிதர்கள் நிரம்பிய அவை கரவொலி எழுப்பி ஆமோதித்தது.

மறுநாள் முராரி லால் மேத்தா அரங்கில் ஸ்ரீமதி எம். எஸ். அவர்களின் இன்னிசைக் கச்சேரி நடந்தது. அவையோர் தேவகானம் பருகி மகிழ்ந்தனர்.

காசி விசுவநாதர் கோவில் அருகே இசைத் தட்டில் பதிவாகியுள்ள சுப்ரபாதத்தை எட்டுத் திக்குகளுக்கும் பரப்புவதற்கென்றே எட்டு ஒலிபெருக்கிகளுடன் கூடிய மிக உயரமான கோபுரம் உருவாகியுள்ளது.

காசி ராமேசுவர சுப்ரபாதம் இசைத்தட்டு வெளியீட்டு விழாவை யொட்டி காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சார்ய சுவாமிகள் திருப்பத்தூர் முகாமிலிருந்து ஸ்ரீமுகம் அனுப்பியிருந்தார்கள்.

''நம் பாரத தேசத்தில் பன்னிரண்டு ஜ்யோதிர் லிங்க க்ஷேத்திரங்களுள் காசியும் ராமேச்வரமும் முக்கியமாகச் சொல்லப்படுகின்றன. ஸேது தர்சனம் பாபநாசனம். கங்கா ஸ்நானம் பாபநாசனம். ஒவ்வொரு ஹிந்துவும் ஸேது – காசி யாத்திரை செய்யாமலிருக்க மாட்டார். மதத்தின் மூலம் மக்களெல்லாம் நாடெல்லாம் ஒன்று என்பதற்கு அறிகுறியாகக் காசி – ராமேச்வர க்ஷேத்திரங்கள் அமைந்திருக்கின்றன.

இந்த ஒருமைப்பாட்டை வலியுறுத்துவதற்கு உதவியாக காசி – ராமேச்வர க்ஷேத்திர சுப்ரபாதங்கள் வெளிவருவதை அறிந்து சந்தோஷிக்கிறோம்.

மேலும் காசியில் பிரகாசிக்கும் விச்வநாதர் அங்கு மரிப்பவர்களுக்கு மோக்ஷம் அளிக்கும் வகையில் ஸ்ரீராம நாமத்தை உபதேசிக்கிறார் என்று சொல்லப்படுகிறது. ஸ்ரீ ராமச்சந்திர பகவானின் அவதார தினத்தன்று காசியில் இந்த ஸுப்ரபாதம் வெளிவருவது மிகவும் பொருத்தமாகும்.

எல்லோருக்கும் ஸ்ரீ மகா திரிபுர சுந்தரி சமேத சந்திரமௌளீச்வர ஸ்வாமியின் அநுக்கிரகம் இருக்கும்படி ஆசீர்வதிக்கிறோம்.''

ராமேச்வரத்தில் நடந்த விழாவில், ராமேசுவர சுப்ரபாதத்தை இயற்றிய ''கவிகோகில'' டாக்டர் வே. ராகவன் அவர்களுக்கு தேவஸ்தானத்தினர் பொன்னாடை போர்த்திக் கௌரவித்தனர். ஸ்ரீ அக்னிஹோத்ரம் ராமானுஜ தாத்தாச்சாரியார் தலைமையில் நடைபெற்ற விழாவில் சேதுபதி ராஜா இசைத்தட்டை வெளியிட அதனை டாக்டர் ராகவன் பெற்றுக் கொண்டார்.

காசியிலும் ராமேசுவரத்திலும் மட்டுமல்லாது பாரதத்தின் முக்கியமான நகரங்கள் பலவற்றிலும் காசி – ராமேசுவர சுப்ரபாதம் இசைத்தட்டு வெளியீட்டு விழாக்கள் விமரிசையாக நடந்தன. அந்த வைபவங்களின் புகைப்படங்களையும் இங்கு காணலாம்.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

## ஈச்சநாரி விநாயகருக்குக் கும்பாபிஷேகம்



பேரூர் பட்டீசுவரப் பெருமான் ஆலயத்தில் பிரதிஷ்டை செய்யத் தெய்வச் சிலைகள் மதுரையிலிருந்து எடுத்துச் செல்லப்பட்டனவாம். வழியில் ஈச்சநாரி கிராமம் வந்த பொழுது வண்டியில் பவனி வந்த விநாயகப் பெருமான், வண்டியின் அச்சை முறிய வைத்து அங்கேயே குடியேறி விட்டாராம்! என்ன முயன்றும் அவரை அங்கிருந்து அகற்ற முடியவில்லை. ஈச்சநாரி விநாயகராக அமர்ந்து விட்ட அவருக்கு மகா கும்பாபிஷேகம் ஜூன் மாதம் 3ந் தேதி ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் முன்னிலையில் நடைபெறவிருக்கிறது. திருப்பணி பூர்த்தி வேலைகள் தொழிலதிபர் பொள்ளாச்சி திரு மகாலிங்கம் தலைமையில் துரிதமாக முன்னேறி வருகின்றன. இந்தத் திருப்பணி கைங்கர்யத்தில் பங்கேற்க விரும்பும் பக்தர்கள் கீழ்க்கண்ட முகவரிக்கு நன்கொடைகள் அனுப்பி வைக்கலாம்.

**திரு நா. மகாலிங்கம்** *தலைவர்,*
அருள்மிகு ஈச்சநாரி விநாயகர் திருக்கோயில் திருப்பணிக் குழு,
சக்தி - நிலையம், பொள்ளாச்சி - 642001

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆



தோற்றம் : 8-5-1892   மறைவு : 9-4-1977

பட்டுக்கோட்டை C. M. சுந்தரமய்யரின் பார்யாள் **ஸ்ரீமதி தர்மாம்பாள்** 9-4-77 அன்று சென்னை தியாகராயநகர் தாமோதர செட்டித் தெரு, நெ. 22, வீட்டில் இறைவனடி சேர்ந்தார்கள். அம்மா, உங்கள் ஆன்மா சாந்தியடைய பிரார்த்தனை செய்யும்,

எம். எஸ். சுப்ரமணியம்
ராஜம் சதங்பமூர்த்தி
அலமேலு தியாகராஜன்
ஜெயலக்ஷ்மி கணேசன்
கோகிலா கிருஷ்ணமூர்த்தி
விசாலம் மணியம்



**திரு பி. எஸ். சபேச அய்யர்**
வழக்கறிஞர், வேலூர், வ. ஆ. மா.
( 1895 - 1976 )

கர்மயோகியாய், ஸ்ரீ ராம பக்தராய் இறுதிவரை வாழ்ந்தவரும், ஆயிரம் பிறை கண்டவரும் எங்கள் இதயங்களில் என்றும் தெய்வமாக நீங்காது குடியிருந்து வரும் உத்தமருக்கு எங்கள் உள்ளம் கனிந்த அஞ்சலி.

# எங்களது மதிப்பீடு எடையைப் பொருத்ததல்ல

சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ் தொழிற்சாலையில் சிறிய 'O' வளையம் செய்வதாயினும் அல்லது வாடிக்கையாளரின் தேவைக்கேற்ப மிகப்பெரிய சஸ்பென்ஷனை வார்ப்பதாயினும் எங்கள் கவனம் ஒன்றே. எடை, உருவம் மற்றும் அளவு எப்படிப்பட்டதாயினும் சரி, இயற்கை மற்றும் செயற்கை ரப்பரைக் கொண்டு உங்களுக்கேற்ற உறுப்புகளை வார்த்துத் தருகின்றோம்.

**எங்கள் பங்கு பல தொழில்களில்**

மோட்டார் மற்றும் சுரங்கத் தொழில், எலெக்ட்ரானிக்ஸ் மற்றும் செய்தித் தொழில் இவ்வாறு பரந்த பல தொழில்களுக்கேற்ப ரப்பரினால் வார்க்கப்படும் உறுப்புகள். டெல்கோ, மைக்கோ, ப்ரீமியர், அசோக்லேலண்ட் மற்றும் புகழ்பெற்ற உற்பத்தியாளர்களுக்காக தனியே வார்க்கப்படும் உறுப்புகள்.

ஸைரப்பர் உறுப்புகளை பலதரப்பட்ட வாடிக்கையாளர்கள் விரும்பி வாங்குகின்றனர்.

**தேவைக்கேற்ப வார்க்கிறோம்**

வடிவம், அளவு, உங்கள் தேவை இவைகளுக்கேற்ப உறுப்புகளை வார்ப்பதே எங்கள் சிறப்பு. எமது இரு அண்மைக்கால வெற்றிகள்: திருச்சியில் பாரத் ஹெவி எலெக்ட்ரிகல்ஸுக்காக ட்ரன்னியன் ஷாஃப்ட் புஷ்ஷிங் ஸஸ்பென்ஷன்கள், பங்களூரில் பாரத் எலெக்ட்ரானிக்ஸுக்காக ஷாக் அப்ஸார்பர்கள்.

உங்களுக்குத் தனிப்பட்ட வகையில் வார்ப்பு தேவைப்பட்டால் எங்களை அணுகுங்கள். அது ஒரே வார்ப்பாக இருந்தாலும் சரி, நாங்கள் செய்து தருகிறோம்.

**நீங்கள் விரும்பி வாங்கவேண்டிய புத்தகம்**

அது "ஸைரப்பர்—உங்கள் தேவைக்கேற்ப வடிவு கொள்கிறது". ரப்பரைக் கொண்டு நாங்கள் என்ன செய்கிறோம், எவ்வாறு செய்கிறோம் எனக் கூறுவது. ஒரு வரி எழுதுங்கள். ஒரு பிரதி அனுப்புகிறோம்.

SIRUBBER

SIRUBBER

சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்
உசிலம்பட்டி ரோடு, கோச்சடை, மதுரை 625 016

SAA SI 2526

# படங்கள் படும் பாடு!

பரந்தாமன்

இந்திரா காந்தி தோற்ற இரண்டொரு நாட்களிலேயே ஆட்சி தலைமை அகங்களிலிருந்து அவரது உருவப்படங்கள் அகற்றப்பட்டன. பதவிக்கு வந்தவுடன் ஒருவரது படத்தைத் தொங்க விட்டு மரியாதை செய்வதும், பதவி போனதும் அப்படம் இருந்த இடம் தெரியாமல் போவதும் சகஜம். கலைஞர் கருணாநிதி மந்திரி பதவி இழந்ததும், அவரது உருவப்படங்களை அகற்றும் பணியும் துரிதமாகவே நடைபெற்றது. அது ஒரு மிகப் பெரும் பணியாக இருந்தது. ஏனென்றால், அவரது உருவப்படம் கிராம அலுவலகங்களிலிருந்து, தலைமைச் செயலகம் வரை இல்லாத இடமே இல்லை என்று சொல்லலாம். அவரது படத்தை அகற்றும் நேரத்தில் அண்ணாவின் படத்தையும் சேர்த்து அகற்றி விட்டனர். இது பற்றி அண்ணா திராவிட முன்னேற்றக் கழகமும் வேறு பல தமிழன்பர்களும் வருத்தம் தெரிவித்ததன் பேரில் அண்ணா படத்தை அகற்றுவதை நிறுத்தினார்கள்.



இந்தியப் பிரதமர் மொரார்ஜி தேசாய் நீண்ட கால அரசியல் அனுபவம், உடையவரானதால் தமது படங்களை மாட்டும் முயற்சிகளை மேற்கொள்ள வேண்டாமென்றுஅறிக்கை விடுத்துள்ளார். அரசியல் அலுவலகங்களில் ராஷ்டிரபதி, மகாத்மாஜி, நேருஜி படங்கள் வைக்கப்பட்டிருக்கின்றன.

கலைஞர் அமைச்சரானதும், பஸ்களிலெல்லாம் திருக்குறளும் திருவள்ளுவர் படமும் இருக்க வேண்டுமென்று உத்தரவிட்டார். காலப் போக்கில் வள்ளுவர் படம் இல்லாமல் திருக்குறள் மட்டும் இருக்கும் பஸ்களும், திருக்குறள் இல்லாமல் திருவள்ளுவர் படம் மட்டும் இருக்கும் பஸ்களும், திருவள்ளுவர், திருக்குறள் இரண்டுமே இல்லாத பஸ்களும் ஓடின. பஸ்களில் உள்ள திருவள்ளுவர் படங்கள் திருட்டுப் போய் விட்டன என்று கூறினார்கள். வள்ளுவர் இந்த வழியிலாவது வீடுதோறும் இடம் பெறுகிறார் என்று மகிழ்ச்சி அந்தக் கண்ணாடி பிரேமை மட்டும் உபயோகித்துக் கொண்டு வள்ளுவருக்குப் பதில் அதிலொரு நட்சத்திரத்தின் படம் இடம் பெற்றுவிடுகிறது!

காமராஜர் முதலமைச்சராக இருந்த காலத்தில் அவரது உருவப்படத்தை ஆரம்பப் பள்ளியிலிருந்து கல்லூரிகள் வரை வைத்தே ஆக வேண்டும் என்ற மவுக நிலை இருந்தது. இதில் கல்வித் துறைத் தலைவராக இருந்த சுந்தரவடிவேலுக்குப் பெரும் பங்கு உண்டு. காமராஜர் படத்தின் கீழ் 'கல்விக் கண் திறந்த தந்தை' என்று எழுதியுமிருந்தார்கள். சுந்தரவடிவேலு பெரியார் வழியாக காமராஜரிடம் கொண்டிருந்த செல்வாக்கு காரணமாக சுந்தரவடிவேலு படத்துக்கும் அதிர்ஷ்டம் அடித்தது. அது மட்டுமல்ல, சுந்தரவடிவேலுவோடு, பால பருவத்தில் மறைந்த அவருடைய அருமைப் புதல்வனுக்கும் அந்தப் பெருமை கிடைத்தது.

1967-ல் காமராஜ் பதவியை இழந்ததும் அவர் படங்கள் கண்ணுக்குத் தெரியாமல் எப்படியோ மறைந்து விட்டன. அவரது அபிமானிகள் கூட தி. மு. க. ஆட்சியின் பார்வை படுமோ என்று அஞ்சிப் படத்தை ஒளித்து வைத்து விட்டார்கள்.




ஆனால் காமராஜர் ஒருவகையில் பாக்கியசாலிதான். அவர் இறந்தபின் அவரது கட்சியினரில் பெரும்பாலோர் இந்திரா காங்கிரஸில்சேர்ந்தும்கூட அந்தக் கட்சியினரும் காமராஜர் படத்துக்கு மரியாதை தரலாயினர். இரு காங்கிரஸ் மட்டுமின்றி அவற்றுடன் கூட்டுச் சேர்ந்திருந்ததி.மு.க., அ. தி. மு. க. வினரும் காமராஜர் படத்தைப் பிரசாரத்துக்குப் பயன்படுத்தி மரியாதை செய்தனர். இந்தப் பெருமை அண்ணாவுக்கும் உண்டு.

பழைய காலங்களில் பொது இடங்களில் பெரும் செல்வந்தர் வீடுகளிலும் பிரிட்டிஷ் மன்னர்கள், மகாராணிகளின் படங்கள் இடம்பெற்றிருக்கும். இதேபோன்று சுதேச மன்னர்களின் படங்களுக்கும் திவான்கள் படங்களுக்கும் அதிக முக்கியத்துவம் உண்டு. திருவிதாங்கூரில் சி. பி. ராமசாமி ஐயர் திவானானதும் சித்திரைத் திருநாள் மன்னர் படத்துக்கு மட்டுமின்றி அவரது அன்னையார் படத்துக்கும் முக்கியத்துவம் அளித்து எல்

லாப் பொது இடங்களிலும் மாட்டுமாறு கவ னித்துக் கொண்டார். கூடவே சி.பி. உருவப் படமும் முக்கியத்துவம் பெற்றதில் ஆச் சரியம் இல்லை.

இரண்டாவது உலக யுத்தத்தின் போது நேதாஜிக்கும் அவரது இந்திய தேசிய ராணு வத்துக்கும் ஏற்பட்ட நிகரற்ற கீர்த்தியில் அவரது படத்துக்குப் பெரும் மதிப்பு ஏற்பட் டது. சில காங்கிரஸ் சொற்பொழிவாளர்கள் கைச் செலவுக்குக் காசில்லாவிட்டால் கடை களிலிருந்து ஒரு ரூபாய்க்கு ஒரு நேதாஜி படம் வாங்கி வந்து தாம் பொதுக்கூட்டத்தில் பேசும்போது திடிக்கென்று ஏலம் விடுவார். அது 50, 100, 200 கூட மதிப்பு பெற்று விடும். அப்படி ஒரு கவர்ச்சி!

காரியாலயங்களில் வேலை செய்பவர்கள் அரசியல் தலைவர்கள் படங்களை மட்டுமல்லாது தாங்கள் விரும்பும் தெய்வத்தின் படத்தையும் பணியாற்றும் இடங்களில் வைத்து விடுகி ருர்கள். இதை எதிர்த்து அன்று ஆட்சொலத் தில் ஒரு சுற்றறிக்கை வந்தது. அது தோல்வி அடைந்து தானே சுருட்டிக்கொண்டுசென்றது.

நவாப் ராஜமாணிக்கம் நடத்தி வந்த 'கிருஷ்ண லீலா' நாடகத்தில் கண்ணன் மண் ணைத் தின்றதும் யசோதை கண்ணன் வாயைத் திறந்து காட்டச் சொல்வாள். அந்த வாய்க்குள் இந்தப் பிரபஞ்சமே தெரிவதாகக் கற்பனை. அதனை அவர் ஒரு நவீன யுக்தியால் திரைப்படம் போலக் காட்டுவார். கடல், மலை, மும்மூர்த்திகள், காமதேனு, கற்பக விருட்சம் என்றெல்லாம் காட்டிக் கொண் டிருப்பார். தொடர்ந்து காந்திஜி, கஸ்தூரிபா, நேதாஜி போன்றவர்களைக் காட்டுவார்! ரசிகர்களின் கரவோசை வானதிரும்! துவாபர யுகக் கண்ணன் வாயில் கலியுக மனிதர்களைக் காட்டுகிறோமே என்ற எண்ணம் அந்த நாடகக் கலைஞருக்கு இல்லை. ரசிகர்களுக்கும் அது தவமுகத் தோன்றவில்லை!

# சிரிப்புத் தாங்க முடியவில்லை



✠ "என்ன சார் இது! அதிசயமாகக் கோடைக்கு ஊட்டிக்கு வந்திருக்கிறீர்கள்?"

"கோடைக்கு என் மாமியார் சென்னைக்கு வருவதாகக் கூறிக் கடிதம் எழுதியிருந்தார். அதைவிடச் செலவு கம்மிதானே என்று குடும்பத்துடன் இங்கே வந்துவிட்டேன்!"

✠ "கர்ப்பை எடுத்துக் கொண்டு எங்கே இவ்வளவு அவசரமாகப் போகிறீர்கள்?"

"மெரீனாப் பீச்சுக்கு! அங்கே இருக்கும் நெரிசலில் இடம் போட வேண்டாமா?"

✠ "ஜில்லென்று சர்பத் சாப்பிடலாமா என்று உன் நண்பர்கள் கேட்கும்போது வேண்டாம், தொண்டை கட்டியிருக்கிறது என்று ஏன் பொய் சொல்கிறாய்?"

"உனக்கு என்ன தெரியும் என் கஷ்டம்? நேற்று இந்த மாதிரிதான் சொல்லி அழைத்துப்போய் மொத்த பணத்தையும் என்னையே கொடுக்க வைத்து விட்டார்கள்!"



✠ "இந்தக் கோடை வெயில் தாங்க முடியவில்லை. வேறு எங்காவது போக ஏற்பாடு பண்ணேன் என்று நச்சரித்துக் கொண்டிருந்தாளே உன் மாமியார், எங்கே அனுப்பினாய்?"

"தார் பாலைவனத்துக்கு!"



✠ ஒரு நாய்க்குட்டி ஒரு 'கூல்ட்ரிங்க்' வேண்டுமென்று ஒரு கடையில் வந்து கேட்டது. குடித்த பின் "விலை இரண்டு ரூபாய்" என்று கடைக்காரன் சொன்ன வுடன் நொந்து கொண்டே கொடுத்தது.

"சாதாரணமாக நாய்க்குட்டிகள் 'சர்பத்' குடித்து நான் பார்த்ததே இல்லை" என்று சொன்னார், ஆச்சரியப்பட்ட கடைக்காரர்.

"இந்த மாதிரி விலை சொன்னால் அவை எப்படி வரும்?" என்றது நாய்க்குட்டி.

- மூரன்






# சாட்சி நம்பர் 3

தமிழாக்கம்: ரா. வீழிநாதன்

## 11. பேரம் முடிந்தது!

நிசிகாந்தனின் வாய் மொழியாக நான் கேட்ட கதை ஒரு விந்தைக் களஞ்சியம். அந்த நிகழ்ச்சிக்குப் பின் அவன் வாழ்க்கையில் தான் எத்தனை எத்தனை குழப்படிகள் தொடங்கி விட்டன!

அப்பொழுது அவர்கள் ராணு காட் அகதி முகாமை விட்டுக் கல்கத்தாவுக்கு வந்து விட்டிருந்தார்கள். யாதவ புரியில் அநாக்கிரமிப்பு செய்து கொண்ட ஏதோ ஒரு காலனியில் ஒரு கூடாரமும் போட்டுக் கொண்டார்கள். அரசின் சார்பில் எல்லோருக்கும் புனர்வாழ்வுக்காகப் பணம் கிடைத்தது. அதைக் கொண்டு அவரவரும் ஸியால்தாட், காலிகாட், கடியா ஹாட் போன்ற இடங்களில் இடம் பிடித்துக் கடை வைத்தார்கள். கல்கத்தாவின் நடைபாதைகளைக்கூட விட்டு வைக்காமல் எத்தனையோ பேர் கடை விரித்திருந்தார்கள். நிசிகாந்தன் ஒருவன்தான் ஓர் இடமும் கிடைக்காமல் ஏமாந்த சோணகிரியாகி விட்டான்.

என்றாலும் ஏதாவது தொழிலில் இறங்க வேண்டும் என்ற கவலை அவனையும் வாட்டிக் கொண்டிருந்தது. ஹௌராச் சந்தையில் போய் மலிவான துணிமணிகள் வாங்கி வீட்டுக்கு வீடு சென்று விற்குமாறு ஒரு சிலர் அவனுக்கு ஆலோசனை கூறினர். வேறு சிலரோ பாருயிபுர்ச் சந்தையிலிருந்து பச்சைக் கறிகாய்கள் வாங்கிக் கல்கத்தாக் கடைத் தெருவில் கொண்டு வந்து விற்குமாறு கூறினர். இப்படிப் பலர் பல யோசனைகள் கூறவே, நிசிகாந்தனும் சட்டென்று ஒரு முடிவுக்கு வந்து செயலில் இறங்க முடியவில்லை.

அன்றும் அப்படித்தான். நாள் முழுவதும் ஒரு தொழிலைத் தேடி ஊர் சுற்றி விட்டு வீடு திரும்பி வந்தால், அவனைத் தேடி வந்த ஒருவன் அவனுக்காகக் காத்திருந்தான். காத்திருந்தவன் சரயுவோடு பேசிக் கொண்டும் இருந்தான்.

நிசிகாந்தனுக்கு அது பிடிக்கவில்லை. அவன் வீட்டில் இல்லாத சமயம் பார்த்து, அவன் வீடு தேடி வந்து, அவன் மனைவியோடு ஒருவன் பேசிக் கொண்டிருப்பதென்றால்....? அது நல்லதற்கென்று ஒருவன் எப்படி எண்ண முடியும்?

எனவே, நிசிகாந்தன் குரலில் கொஞ்சம் கோபத்தைக் காட்டி, ''யார் நீங்கள்?'' என்று கேட்டான்.

''ஐயா! என் வீடும் பாரிஸாலுக்குப் பக்கத்தில் உள்ள கைலா கிராமத்தில் தான் இருக்கிறது. நானும் உங்களைப் போல் ஓர் அகதி. அரசாங்கம் என்னைத் தண்டகாரண்யத்தில் உள்ள மானு முகாமுக்கு அனுப்ப வேண்டும் என்று இருந்தது. ஆனால் நான் போகவில்லை. அந்த லங்காபுரிக்கு எவன் போவான்? நான் இங்கேயே ஒரு தொழிலைத் தொடங்கி விட்டேன்'' என்றான் வந்தவன்.

''என்ன தொழில் நடத்துகிறீர்கள்?'' ஏதாவது வியாபாரமா? என்ன பொருள்?'' என்று கேட்டான் நிசிகாந்தன்.

''அதைச் சொல்லத்தானே உங்களிடம் வந்திருக்கிறேன்! எனக்குப் பின்னாலே மிகப் பெரிய பணக்கார ஸேட் ஒருவர் இருக்கிறார் அதனாலே முதலீட்டைப் பற்றிக் கவலைப்பட வேண்டியதே இல்லை.''

''அதெல்லாம் சரி. என்ன தொழில், என்ன பொருள் என்று கேட்கிறேனே! அதைச் சொல்லுங்கள், முதலில்!''

''அவசரப்படுகிறீர்களே! அதைச் சொல்லத்தானே உங்கள் வீடு தேடி வந்திருக்கிறேன். இந்தத் தெருவிலே இத்தனை பேர் இருக்கிறார்கள். அத்தனை பேரையும் விட்டு விட்டு உங்களைத் தேடி நான் வந்திருக்கிறேனே, ஏன் வரணும்? ஏனென்றால் நீங்களும் நானும் ஒரே ஊரைச் சேர்ந்தவர்கள். நீங்கள் என் பேச்சைக் கேட்டு விட்டுச் சரியென்றால், ஒரே வருஷத்திலே நீங்கள் இரண்டு வீடுகள் கட்டி விடலாம்.''

''அது எப்படி?''

''அதைத்தான் இத்தனை நேரமும் உங்கள் மனைவியிடம் எடுத்துச் சொல்லிக் கொண்டிருந்தேன். எனக்குத் தெரிந்த எல்லோருமே சிறுகச் சிறுகச் சொந்த வீடு கட்டிக் கொண்டு

விட்டார்கள். இன்று அவர்கள் இரண்டு கைகளாலும் ஆயிரம் ஆயிரமாக ரூபாயைக் குவிக்கிறார்கள். அப்படியிருக்கிற பொழுது நாம் மட்டும் ஏன் பட்டினி-பசி கிடந்து சாக ணும் என்று கேட்கிறேன்?''

அதற்குப் பின் அவன் சொன்ன அத்தனை சொற்களுக்கும் ஒரு நேர் பொருள் கொள்ள வேண்டுமென்றால், சுற்றி வளைக்காமல் ஒரே சொல்லில் சொல்லி விடலாம் — கள்ளக்கடத்தல் — என்று!

இத்தனை பெரிய கல்கத்தா நகரத்திலேயும் ஒரு சில இடங்கள் காலியாகக் கிடக்கின்றன. ஆள் நடமாட்டம் அவ்வளவாக இராது. ஓரளவு ஏகாந்தம் உண்டு. குறிப்பாகக் கங்கையின் இருமருங்குகளையும் கூறலாம். சூஞ்சடா, சந்தன் நகரில் தொடங்கி பரா நகர் வரைக்கும், அப்புறம் கல்கத்தா மைதானத்தின் பக்கமாகக் கங்கைக் கரையோடு கிதிர்பூர் வரைக்கும். அங்கிருந்து மீண்டும் ஆதிகங்கையைப் பிடித்தால், காளிகாட், சேத்லா வழியாக டாலிகஞ்சு, குந்காடா, குல்பி, மேற்குப் புண்டியாரி வரைக்கும்.

இங்கெல்லாம் துறவிகள் வாழும் குடிசைகள் ஏராளமாக உண்டு. ஆங்காங்கே ஆசிரமச் சூழல் அற்புதமாக உருவாகியிருக்கும். சடாமுடி வளர்த்த துறவிகள் உடல் முழுவதும் திருநீறு பூசி எதிர்த்தாற் போல் தூபம் போட்டுக் கொண்டு அறமே உருவென அமர்ந்திருப்பார்கள். பக்தர் குழாம் அவர்களைச் சுற்றிச் சூழ்ந்திருக்கும். ஒரு புறம் மெய் ஞானச் சபை கூடியிருக்கும். இன்னொரு புறம் பஜனைகளும் கீர்த்தனைகளும் அமர்க்களப்படும். சில இடங்களில் ஒலி பெருக்கி அமைத்துப் புராணப் பிரவசனங்களும் இதிஹாஸ — உபன்யாசங்களும் நடைபெற்றுக் கொண்டிருக்கும். இப்படியாக ஏகாந்தக் கோலாகலம் நிலவும்.

''ஆமாம். இதையெல்லாம் நான் பார்த்திருக்கிறேனே! எங்கள் பேட்டையிலே கூட இதுபோல ஒரு புதிய ஆசிரமம் ஆரம்பித்திருக்கிறதே! அதிலே கூட ஒரு ஸ்வாமிஜி இருக்கிறாரே!'' என்ற நிசிகாந்தன், ''அவர் யார்?'' என்று கேட்டான்.

''அவன் எங்கள் ஆள்தான்!''

''உங்கள் ஆளா? என்ன சொல்லுகிறீர்கள் நீங்கள்? ஒரு ஸ்வாமிஜி எப்படி உங்கள் ஆளாக இருக்க முடியும்?'' என்று கேட்டான் நிசிகாந்தன்.

''எங்கள் ஆள் என்றால் புரியவில்லையா? அந்த ஆசிரமத்தை நடத்துகிறதே நாங்கள்தான். அதற்கு ஆகும் செலவை யெல்லாம் நாங்கள்தான் தருகிறோம்!'' என்றான் அவன்.

நிசிகாந்தனும் சரயுவும் அவன் பேச்சைக் கேட்டு வியந்து போய் மூக்கில் விரலை வைத்தார்கள். ''ஆமாம். அந்த ஆசிரமத்துக்கு ஆகும் செலவுகளையெல்லாம் நீங்கள் ஏன் தரணும்?'' என்று கேட்டார்கள்.

''எங்கள் தொழிலே அது தானே?'' என்றவன், ''எங்களுக்கு ஒரு முதலாளி. அவருடைய தொழில் இது. முதலாளிக்கு எது தொழிலோ, அதைத்தானே அவருடைய சிப்பந்திகளும் செய்ய வேண்டும்? உலகத்திலே பல பல தொழில்கள். அவனவன் அவனவனுக்குப் பிடித்ததைச் செய்கிறான். ஒருவன் துணி வியாபாரம் செய்கிறான். ஒருவன் மர வியாபாரம் செய்கிறான். ஒருவன் இரும்பு வியாபாரம் செய்கிறான். உலகத்திலே தொழில்களுக்கு என்ன குறைச்சல்?'' என்று கேட்டான்.

''எனக்கு இதெல்லாம் தெரியாதே!''

''சுவாமி! நானும் உங்களைப்போலத்தான். அப்பொழுதெல்லாம் எனக்கும்தான் என்ன தெரியும் என்கிறீர்கள்? நானும் உங்களைப் போலத்தான் பாரிஸாலிலிருந்து அகதியாக வந்து ஒரு மண்ணும் தெரியாமல் ஊர் சுற்றிக் கொண்டிருந்தேன். என் நிலைக்கு இரங்கி எவனோ ஒருவன் வழிகாட்டினான். இன்று என் நிலையைப் பாருங்கள். யாதவ்பூரிலே இரண்டு அடுக்கு மாளிகை கட்டி விட்டேன். இரண்டு பையன்கள் கல்லூரியிலே படித்துக் கொண்டிருக்கிறார்கள். பெண்ணை நல்ல இடத்தில் கல்யாணம் செய்து கொடுத்து விட்டேன்!'' என்றான் அவன்.

''இதெல்லாம் உங்களாலே எப்படி முடிந்தது?'' என்று கேட்டான் நிசிகாந்தன்.

''எல்லாம் ஆசிரமத்தின் அருள்தான். ஆசிரமத்தின் மூலமாக எங்களுக்கு நல்ல வருமானம் வருகிறது. ஆனால் யாருக்கும் எதுவும் எப்படியென்று தெரிவதில்லை. பெயருக்கு ஒரு தையற்கடை தொடங்கியிருக்கிறேன். அதிலே வருமானமே கிடையாது. செலவுக்குக் கூடக் கட்டுகிறதில்லை!''

அதைக் கேட்டு நிசிகாந்தன் மகிழ்ந்து போனான். இத்தனை நாட்களும் ஒரு தொழிலுக்காக அவன் எத்தனை திக்குமுக்காடிக் கொண்டிருந்தான்?



பணம் சம்பாதிப்பதற்கு இது எத்தனை நேரான, சுலபமான வழி! இத்தனை நாட்களும் அவனுக்குத் தெரியாமல் போய் விட்டதே! இதுவரைக்கும் யாரும் இப்படி ஒரு தொழில் இருக்கிறது என்று அவனிடம் சொல்லக் கூட... வில்லையே?

வந்தவன் நிசிகாந்தனின் மனத்தை வெகு சுலபமாகப் படித்து எடை போட்டுவிட்டான்.

"நீங்கள் நம் ஊர்க்காரர் என்கிறதனாலே உங்களிடம் கூறுகிறேன். இல்லாவிட்டால் ஆட்களுக்கு என்ன பஞ்சம்? விரல் அசைப்பதற்கு முன்னால் வேண்டியவர்கள் வந்து நிற்பார்கள்!" என்றான்.

"இதோ பாருங்கள், கட்டின பெண்டாட்டிக்காகத்தான் கஷ்டப்படுகிறேன். ஒன்றிக் கட்டையாக இருந்தால் கவலையும் இராது. நினைத்தபடி நினைத்த இடத்துக்குப் போகலாம், வரலாம்!" என்றான் நிசிகாந்தன்.

"குடும்பத்தில் யார் யார் இருக்கிறார்கள்? குழந்தை — குட்டிகள் உண்டா?"

"பகவான் புண்ணியத்திலே, நல்ல வேளையாகக் குழந்தை - குட்டி என்ற வம்பு - தும்பு கிடையாது. அவை இருந்து விட்டால் என் கதி அதோ கதிதான். அவள் கருணையால் தப்பிப் பிழைத்தேன். ஆனால் இந்தப் பணம்-காக சிரமம் இருக்கிறதே. இதுதான் ஆள் பிராணனை அடியோடு வாங்குகிறது!"

"பணம் - காசுக்கு இனிமேல் நீங்கள் சிரமப்பட வேண்டியதில்லை. அந்தப் பொறுப்பை என்னிடம் விட்டு விடுங்கள். இந்தாருங்கள், இருநூறு ரூபாய்! இப்போதைக்கு வைத்துக் கொள்ளுங்கள். இன்னொரு நாள் வந்து என்னவென்ன செய்யணும் என்றதைச் சொல்லிப் போகிறேன்!"

ரொக்கமாக இருநூறு ரூபாயைப் பார்த்த பொழுது நிசிகாந்தனின் விழிகள் நிலைக் குத்தவிட்டுப் பளிச்சிட்டன.

"நீங்கள் ஒன்றும் யோசிக்காதீர்கள். இந்தப் பணத்துக்கு எனக்கு ரசீதுகிசீது தேவையில்லை. ரசீது வாங்கிக் கொண்டு நாங்கள் பண வியாபாரம் செய்யவில்லை. நீங்கள் எங்கள் ஊர்க்காரர். உங்கள் விஷயத்திலே நம்பிக்கை அவநம்பிக்கை என்கிற பேச்சுக்கே இடம் இல்லை. நான் வருகிறேன். இருட்டி விட்டது!" என்று கூறி எழுந்தவன், இரண்டொரு அடி எடுத்து வைத்ததுமே திரும்பிப் பார்த்து, "யாரிடமும் எதுவும் சொல்லி விடாதீர்கள். உலகத்தில் எத்தனையோ விதமான ஜனங்கள் இருக்கிறார்கள். எல்லோருமே உங்களையும் என்னையும் போல் நல்லவர்களாக இருந்து விட





''நான் உன்னைப் பெண் பார்க்க வந்தபோது, யாருக்கும் தெரியாமல் எனக்கு ஏதோ ஜாடை காட்டினாயே! என்ன அது?''

''முகத்தில் அசடு வழிகிறது. துடைக்கவும்.''

மாட்டார்கள். அத்தனை பயல்களும் அயோக்கியர்கள். ஆள் ஏமாந்தால் கழுத்துக்குக் கத்தி வைக்கிறவர்கள். எப்பொழுது எவன் எப்படி இடறி விடுவான் என்று யாருக்குத் தெரியும்?'' என்றான்.

அவன் பேச்சிலே மயங்கிய நிசிகாந்தன் அவனை வாசல் வரைக்கும் கொண்டு விடப் போனான். ''கவலைப்படாதீர்கள். நான் யாரிடமும் மூச்சுப் பிரிய மாட்டேன்!'' என்றான்.

வந்தவன் போய் விட்டான்.

''அடேயப்பா! இந்த ஆண்டவனின் மகிமைதான் என்ன?''

அவன் பெருமைபாடாத குறை, நிசிகாந்தன் யோசிக்கத் தொடங்கி விட்டான். 'அவன் அருள் இல்லையென்றால், முன்பின் முகம் தெரியாத, ஊர்-பேர் அறியாத ஒருவன், நிசிகாந்தனின் வீடு தேடி வந்து, வின்னாமல்-விரியாமல் ரொக்கமாக இருநூறு ரூபாயைக் கொடுத்த சுவடு கூடத் தெரியாமல் கொடுத்துவிட்டுப் போவானா?

'கன சிரத்தையாகக் கொடுத்துப் போயிருக்கிறானே, என்ன வேலை செய்ய வேண்டியிருக்கும்?' நிசிகாந்தனின் புத்திக்கு அதுதான் எட்டவில்லை. 'ஒப்பராணை, அப்படி என்ன வேலையாயிருக்கும் அது? இரண்டொரு ஆண்டுகளுக்குள்ளே இந்தக் கல்கத்தா நகரத்திலேயே இரண்டு மச்சு வீடுகள் கட்டி விட்டானாமே?' நிசிகாந்தனுக்கு இதைப் பற்றிய யோசனையே அறிவுக்கு அப்பாற்பட்ட விஷயமாகப்பட்டது. 'விடு, பணம் வந்துவிட்டது. பார்த்துக் கொள்ளலாம்!' என்ற முடிவுக்கு வந்து விட்டான்.

ஆனால் அதிக நாட்கள் காத்திருக்க வேண்டிய அவசியம் ஏற்படவில்லை. இரண்டு நாட்களுக்கெல்லாம் அந்த ஆள் திரும்பி வந்தான், ''நிசிகாந்தன் வீட்டில் இருக்கிறாரா?'' என்று கேட்டுக் கொண்டு.

சரயுதான் வீட்டில் இருந்தாள். ''வாருங்கள்!'' என்று ஆசார-உபசாரத்துடன் வரவேற்றுக் குடிசைக்குள் உட்கார வைத்து, 'தேநீர் அருந்துகிறீர்களா?' என்று கேட்டாள்.

அந்த மனிதனின் பேச்சில்தான் என்ன வினயம்? ''அம்மா குழந்தை! நீ கேட்கிற பொழுது நான் தேநீர் வேண்டாம் என்று கூறுவேனா?'' என்று கேட்டுச் சரயுவின் கையிலில் தேநீர் வாங்கிப் பருகினான். பிறகு, ''அன்று நான் சொல்லிவிட்டுப் போனேனே, அதைப் பற்றி நிசிகாந்த பாபு யாரிடமும் எதுவும் பேசவில்லையே!'' என்று கேட்டான்.

''இதையெல்லாம் போய் அவர் யாரிடம் சொல்லிக் கொண்டிருப்பார்?'' சரயு தன் பதிலைக் கேள்வியாகவே வடித்தாள்.

''நிசிகாந்த பாபு எங்கே போயிருக்கிறார்?''

''என்னிடம் சொல்லிப் போகவில்லை!''

''எப்பொழுது திரும்பி வருவார்?''

''உறுதியாகச் சொல்ல முடியாது. இப்பொழுதே கூட வரலாம். இல்லையென்றால் நேரம் கழித்தும் வரலாம். எப்பொழுது வருவார் என்று நான் எப்படிச் சொல்ல முடியும்? உங்களுக்கு ஏதாவது சொல்ல வேண்டியிருந்தால், என்னிடம் சொல்லி விட்டுப் போங்கள். நான் அவரிடம் சொல்லி விடுகிறேன்.''

''அப்பொழுது கேள், அம்மா! உன்னிடமே சொல்லுகிறேன். என் பெயர் சுதர்சன் — சுதர்சன் போத்தார். பாரிஸாலிலிருந்து உங்களைப்போலவே புகலிடமின்றி வந்தேன். வந்த பின் கஷ்டநஷ்டங்கள் சொல்லி மாளாது. ஆனால் என்றைக்கு இந்தத் தொழில் ஆரம்பித்தேனோ, அன்றைக்கே என் கஷ்டங்கள் எல்லாம் விடிந்து விட்டன. இப்பொழுது சந்தோஷமாக இருக்கிறேன். ஒரு குறைவும் இல்லை. உங்கள் நிலைமையைப் பார்த்தேன். உங்களைப் பார்க்க வேண்டும் என்று தோன்றியது. என்றைக்கு இந்த எண்ணம் தோன்றியதோ, அன்றைக்கே உங்களைப் பார்க்க வந்து விட்டேன்!''

''நீங்கள் செய்கிற தொழில் என்ன? இத்தனை லாபம் கொழிக்கிறது என்கிறீர்களே!'' என்று கேட்டாள் சரயு.

''பார்க்கப் போனால் கொஞ்சம்கூட வகை தொகையில்லாத தொழில்தான். ஒரு வரன் முறையில்லாத - தொழிலாக இருக்கிறதனால்தான், லாபமும் வரன் முறையில்லாமல் வேண்டியது கிடைக்கிறது. பொதுவாகத் தொழில் முறைகளே இப்படித்தான். ஆட்டைத் தூக்கி மாட்டிலே போட்டு, மாட்டைத் தூக்கி ஆட்டிலே போடுறாப் போல! உனக்கு இருக்கிற கட்டித்தனத்துக்கு நீ எல்லாவற்றையும் நன்றாகப் புரிந்துகொள்வாய், அம்மா! ஆனாலும், நான் சொல்கிறதை நீ எப்படி எடுத்துக் கொள்வாயோ என்று யோசிக்கிறேன்!'' என்றான் சுதர்சன்.

''முதலில் சொல்லுங்கள். அப்புறம்தானே நான் கொஞ்சம் யோசனை செய்து பதில் சொல்ல முடியும்? நீங்கள் விஷயத்துக்கே வராமல் இப்படிச் சுற்றி வளைத்தால்.....?'' என்று கேட்டாள் சரயு.

சுதர்சன் அப்புறம் எல்லாவற்றையும் விவரமாகச் சொன்னான். செய்ய வேண்டிய காரியத்தைக் கனகச்சிதமாகப் படம் பிடித்தும் காட்டினான். அதைக் கேட்ட சரயு அதிர்ந்து போனாள். அவன் சொல்லும் காரியத்துக்கு அவள் உடந்தையாவதா? அது எதில் கொண்டு போய் விடுமோ, யார் கண்டார்கள்? (தொடரும்)

‘கோல்ட் ஸ்-பாட்டுக் கச்சேரி,
நவரசச் சுவை மாரி!’







Creative Unit-A 2746

குதூகல நகை கொஞ்சும் சுவை: கோல்ட் ஸ்பாட்



திருநெல்வேலி [illegible] கல்லூர் கிராமம் ஸ்ரீ R. மகாதேவ அய்யர் (Retired Cashier) அவர்கள் குமாரி சௌ. லலிதாவுக்கும், கல்லிடைக்குறிச்சி ஸ்ரீ K. ஹரிஹர அய்யர் (Chief Accountant State Bank of Travancore) அவர்கள் குமாரன் சிரஞ்சீவி ராமகிருஷ்ணனுக்கும் சமீபத்தில் பம்பாயில் திருமணம் சிறப்பாக நடந்தேறியது.

வாழ்க மணமக்கள்!

# வீடு

**லட்சுமி ரமணன்**



அவர்கள் அதை மிகவும் தெளிவாகத்தான் சொன்னார்கள்.

ஒன்றன் பின் ஒன்றாகக் கோவையாக, வரிசையில் இணைந்த ரயில் பெட்டிகளைப் போன்று அவர்கள் சொன்ன காரணங்களும் செய்த முடிவும்... எல்லாவற்றையும் புரியும்படிதான் கூறினார்கள்.

எனக்குத்தான் அவை ரயில் பிளாட்பாரத்துக் கூச்சலுக்கிடையில் கேட்கிற சம்பாஷணையைப் போன்று ஒரே குழப்பமாகப் பட்டது.

எங்கோ இடிக்கிற இடியும் மின்னலும் தலையில் விழுகிறது போன்ற அதிர்ச்சி. கடலுக்குள் உருளுகிற அலைகள் நழுவி உறுமிக் கொண்டு காலடியில் பாய்கிறது போன்ற மனத் தோற்றம்.

நாற்சந்தியில் நடுத் தெருவில் கட்டுப்பாடு இல்லாமற் போன வாகனங்களுக்கிடையில் மாட்டிக்கொண்டு விட்டாற்போன்ற பிரமை. அவர்கள் என்ன சொன்னார்கள்? அதைக் கேட்கவா நான்... இல்லை நானும் ஜானுவும் அத்தனை கஷ்டப்பட்டு.... ஜானுவும் அதைக் கேட்டிருந்தால் என்ன சொல்லி இருப்பாள்...

'பார்த்தீர்களா வேண்டும் உங்களுக்கு நன்றாக' என்று கைக் கொட்டிச் சிரித்திருப்பாளோ?

'இல்லை. 'இதற்குத்தானா?' என்று என்னைப் போன்று முறிந்த கொம்பாகத் தத்தளித்திருப்பாளோ?

இனி அவள் அபிப்பிராயங்களைத் தெரிந்து கொள்ள வழி இல்லை. புண்ணியவதி போய்ச் சேர்ந்து பதின்மூன்று நாட்களாகி விட்டன. அதற்குத் தங்கள் குடும்பங்களுடன் வந்த பிள்ளைகள்தான் அதைச் சொல்லி என்னைச் செயலற்றுப் போகும்படி செய்து விட்டிருந்தார்கள்.

சொந்தத்தில் வீடு கட்டிக் கொள்ள வேண்டும் என்பது நான் என்று படித்துவிட்டு உத்தியோகம் செய்யப் புகுந்தேனோ, அன்றிலிருந்து வித்தாக மனத்தில் விழுந்து விட்ட ஆசை.

'வீடு வீடு' எப்பொழுது பார்த்தாலும் இதுஎன்ன ஜபம் மாதிரி. 'சரியான பைத்தியம் தான் போங்கள்' ஜானு பல சந்தர்ப்பங்களில் என்னைக் கேலி செய்ததுண்டு.

''என்னசெய்வது? பணக்கார மாமனாராகக் கிடைத்திருந்தால் பெண்ணோடு ஒரு சிறிய வீடு...குறைந்த பட்சம் வீடு கட்ட ஒரு மனையாவது கொடுத்திருப்பார். யாருக்கு எத்தனை பிராப்தமோ அதுதானே கிடைக்கும்.'' நான் வேண்டுமென்றே சீண்டும் பொழுது ஜானுவின் முகம் கோபத்தில் சிவந்து போகும்.

''ஆமாம், நீங்கள் பெரிய ராஜகுமாரன். இன்னும் அதுவேறு குறையாக்கும். அப்படி யாராவது கொடுக்கத் தயாராக இருந்திருந்தால் பண்ணிக் கொண்டிருப்பது தானே?'' என்று கேட்டுவிட்டு அவள் 'விர்' என்று எழுந்து போய் விடுவாள்.

கல்யாணம் செய்து பார்க்க எனக்குப் பெண்கள் கிடையாது. இரண்டு பிள்ளைகள் கடன் வாங்கி வீட்டையாவது கட்டிப்பார்ப்போமே என்று எனக்குத் தோன்றியதில் தவறேதும் இருந்ததாகப் படவில்லை.

ஜானகிதான் எப்போதுமே எதிர்க்கட்சி. என் எண்ணத்தை வெளியிட்டதுமே போர்க் கொடி உயர்த்தி விட்டாள்.

''என்ன சொன்னீர்கள்? அரசிடம் கடன் வாங்குவதா? வருகிற சம்பளமே கைக்கும் வாய்க்கும் போதவில்லை. கடன் வாங்கினால் பிடிப்பு வேறே போய்விடும். பசங்கள் இரண்டு பேரையும் நன்னா படிக்க வெச்சு, எல்லோரும்; சாப்பிட்டு, துணி உடுத்தி, உடம்பு பார்த்துக் கொண்டு... விலைவாசிகளைப்பற்றி உங்களுக்கு ஏதாவது தெரியுமா?''

ஜானு கேட்டதில் அர்த்தம் இல்லாமல் இல்லை. நான் வருகிற சம்பளத்தை அப்படியே மனைவியிடம் சமர்ப்பித்து விடுவேன். கைச் செலவுக்குக் கூட அவளைக் கேட்டு வாங்கிக் கொள்ளும் பழக்கம்தான். கடை கண்ணிக்குப் போய், சாமான் வாங்கிப் போட்டு அலட்டிக் கொண்டது என்றுமே கிடையாது.

ஒரே ஒரு பலவீனம் மட்டும் என்னிடம் உண்டு. நான் சிகரெட் பிடிப்பேன்.

அதைக்கூட மளிகைச் சாமான்கள் வாங்கும்போது ஜானு வாங்கிப் போட்டு விடுவாள். மாதம் ஒரு சினிமா கண்டிப்பாக உண்டு.

கடனுக்கு மனு எழுதிப் போட்டு விட்டு, நான் அவளிடம் அறிவித்த பொழுது, ''என்ன செய்வது, இப்போதிலிருந்தே பட்டினி இருந்து பழகிக் கொள்ளுகிறேன்'' என்று முகத்தில் அறைவது போன்று பதில் சொன்னாள். நானும் பேசவில்லை.

ஓரிரு நாட்கள் வார்த்தைகளின் பரிமாறல் கூட இன்றி 'ம்'கார 'ஆம்'காரத்தில் கரைந்





**மணல் இறக்குமதி**

ஒவ்வொரு நாடும் என்னென்னவோ பொருட்களை இறக்குமதி செய்கின்றன. ஆனால் 'சௌதி அரேபியா' மணலை இறக்குமதி செய்கிறது, ஸ்காட்லாந்திலிருந்து! ஆம், உள் நாட்டு மணல் கட்டிடங்கள் கட்ட லாயக்கில்லையாம்! அதனால் வெளி நாடுகளிலிருந்து 'சௌதி அரேபியா' மணலை இறக்குமதி செய்கிறது!

— டைம்ஸ் ஆஃப் இந்தியா - சம்பத்குமாரி

தன. மூன்றே நாட்களில் அவள் வளைந்து கொடுத்து விட்டாள்.

அவள் மனம் மாறி மீண்டும் வேதாளமாக மரம் ஏறுமுன் வீட்டின் வரைபடத்தைத் தயாரிக்கும்படி நண்பர் ஒருவரிடம் பொறுப்பையும் ஒப்படைத்தேன்.

நுழைந்ததும் நீண்டு கொண்டு போன வராந்தாவின் ஒரு புறம் வரவேற்பறை. மறுபுறம் குளியலறை வசதிகளுடன் இரு படுக்கையறைகள். இடது புறம் திரும்பினால் சமையலறையும் இணைந்தாற் போன்று ஸ்டோர் ரூமும்.

''பூஜையை எங்கே வைத்துக் கொள்வதாம்?'' ஜானகி அங்கலாய்த்தாள்.

''ஏன், ஸ்டோர் ரூம் இருக்கே.''

''ஆமாம். ஸ்டோர் ரூமில் குப்பென்று வைத்து மூடினால் ஸ்வாமிக்கு மூச்சு முட்டிப் போகும்.''

''இதைவிடப் பெரிசாகக் கட்டினால் நமக்கு மூச்சு முட்டுமே? பணத்திற்குச் சொல்கிறேன். என்ன செய்யலாம்?''

''இல்லாவிட்டாலும் முட்டப் போகிறது பாருங்கள்.''

''சரி சரி, பேசாமல் இரு.''

மனைவாங்கி அஸ்திவாரமிட்டு வீட்டைக் கட்டத்துவங்கி விட்ட சமயம் மூத்தவன் ரகு டைபாய்டு வந்து மலையாகப் படுத்து விட்டான். டாக்டர் ஆஸ்பத்திரியில் அவனைச் சேர்க்கும்படி சொல்லி விட்டார்.

ஜானகி இறைவனைப் பிரார்த்திப்பதும் அழுவதுமாக இருந்தாள்.

'ஒரு வேளை நாம் ஆரம்பித்த வேளை சரியில்லையோ? ரகுவுக்கு ஏதவாது நேர்ந்துவிட்டால்? நானும் கலங்கிப் போனேன். இருந்தாலும் காட்டிக் கொள்ளாமல் ''மனுஷான்னு உடம்புக்கு வராதா. ஏன் இப்படிக் கவலைப்படறே?'' என்று அவளைத் தேற்றினேன்.

எங்களை இரண்டு வார அலைச்சலுக்கும் கவலைக்கும் ஆளாக்கி விட்டு ரகு பிழைத்தெழுந்தான்.

சிமெண்டின் விலை திடீரென்று உயர்ந்து அது கிடைப்பதே அரிதாகி மறுபடியும் கட்டிட வேலை நின்றது.

வெயிலிலும், மழையிலும், களைப்பிலும் கவலைகளுக்கிடையிலும் பணத் தட்டுப்பாடுகளுக்கு நடுவிலும் வீட்டைக் கட்டி முடித்துக் கிரகப் பிரவேசமும் செய்தோம்.

அன்று நான் அடைந்த மகிழ்ச்சியை வர்ணிக்க முடியாது.

எங்கள் தேவைகளைக் கூடுமானவரை குறைத்துக் கொண்டோம். பிள்ளைகள் பெரியவர்களாகிக் கல்லூரிக்குச் செல்லத் தொடங்கியதும் ஜானகி செலவை ஈடுகட்டத் தன் நகைகளில் சிலவற்றை இழக்க நேர்ந்தது.

வீட்டை அழகுபடுத்திப் பார்க்க வேண்டும்!

அழகான திரைச் சீலைகள், தரை விரிப்புகள், சுவர்களை அலங்கரிக்க எடுப்பான ஓவியங்கள் என்று கற்பனையில் விரிந்த வர்ணனைகள் யாவும் மனத்தளவில் நிற்க வேண்டியதாயிற்று.

ரகுவும், ராஜுவும் படிப்பு முடிந்ததும் ஹைதராபாத்திலும், நாகபுரியிலும் வேலைக்குச் சேர்ந்தார்கள். அவர்கள் திருமணங்களும் முடிந்து குடும்பங்களும் வளர்ந்தன. அதிசயமான விஷயம் என்னவென்றால் தன் கடைசி மூச்சு வரை ஜானு வீட்டைவிட்டுப் பிள்ளைகளிடம், போகச் சம்மதிக்கவே இல்லை... ''ஆசைப்பட்டுக் கஷ்டப்பட்டுக் கட்டினது. அதிலேயே என் கடைசி மூச்சுப் பிரிய வேண்டும்'' என்று சொல்லிக் கொண்டேயிருந்தாள். அவள் மனம் போலவே நடந்தும் விட்டது. அவள் இருந்தது வாழ்ந்தது அனைத்துமே கனவாகிவிட்ட நிலையில். அவள் இங்கே அமர்ந்தாள், இங்கே சமைத்தாள், இங்கே படுத்துக் கொண்டாள் என்ற நினைவுகளை மட்டுமே தடவிப் பார்க்க நினைக்கும் என்னிடம் என் பிள்ளைகள் என்ன சொன்னார்கள், தெரியுமா?

''நாங்கள் எங்கோ தூர தேசங்களில் இருக்கிறோம். எங்களுக்கு எதற்குச் சென்னையில் வீடு? நாங்கள் ரிடையர் ஆகி வந்து இருக்கும் நாளைப் பார்த்துக் கொள்ளலாம். வாடகைக்கு விட்டாலும் வீண் வம்பு. குடித்தனக்காரர் ஒழுங்காகப் பணம் தர வேண்டுமே? இருக்கிற கவலைகளைக் கட்டி மாரடிக்கவே நேரம் போதவில்லை. அதைவிட உங்கள் காலத்திலேயே இதை விற்றுத் தொலைத்து ஆளுக்கு இத்தனை என்று பிரித்துக் கொடுத்து விடுங்கள். எங்களுக்கும் இப்போது பணம் தேவையாக இருக்கிறது.''

அவர்களுக்கு உடனடியாக அப்படிப்பட்ட பணத் தேவை என்ன என்பதை அறிந்து கொள்ள நான் ஆசைப்படவில்லை.

ஆனால் என் கண் முன்னே உருப்பெற்று என்னுடையதாகி நின்ற வீட்டை என் கையாலேயே விற்கும்படி சொல்லுகிறார்கள். பெற்ற தாய் போய்ப் பதினைந்து நாட்கள்கூட ஆகவில்லை. அதற்குள்ளேயே எனக்கும் என் வீட்டுக்கும் சீட்டுக் கிழித்துவிட நினைக்கிறார்கள். என்ன உலகம்!

இதற்காகவா நானும் ஜானுவும் இத்தனை கஷ்டப்பட்டோம். வாழ்க்கையில் எந்த சுகத்தையும் அனுபவிக்காமல் ஒதுங்கி வாழ்ந்தோம்.

''வீட்டை விற்க முடியாது போங்கடா'' என்று தொண்டைக் கிழியக் கத்துகிறேன். இவனுக்குப் பைத்தியம் பிடித்து விட்டதா என்ன என்பது போல் அவர்கள் என்னை வியப்புடன் பார்க்கிறார்கள்.

யார் எது வேண்டுமானாலும் நினைத்துக் கொள்ளட்டும். எனக்கு அக்கறை இல்லை!

# கருகிய மலர்!

கே. ஜெயலக்ஷ்மி

மகள் மல்லிகாவின் செயல்களையே வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தார் பரமசிவம்.

டிசம்பர் கனகாம்பரத்தைக் கட்டி முடித்த பிறகுதான் அதை என்ன செய்வது என்கிற கேள்வியே மல்லிகாவின் மனத்தில் தலைநீட்டியது.

''அப்பா! இதைச் சுவாமி படத்துக்குப் போடலாமா?''

''யாரும் போடறதா தெரியவில்லையே!''

விசுக்கென்று எழுந்தாள் மல்லிகா. ''அப்ப இதைப்பக்கத்து வீட்டுக் கீதாவிடம் கொடுத்து விட்டு வருகிறேன்'' என்று கூறி நடந்தாள்.

''நில், மல்லிகா.''

திடுக்கிட்டு நின்றாள் அவள்.

''நீயே வைத்துக் கொள், அம்மா.''

''அப்பா!'' வெந்த புண்ணில் வேல் பாய்ந்து விட்டது போல் அலறினாள் அவள்.

''ஏனம்மா இப்படிப் பதறுகிறாய்?''

'' வந்து....வந்து....'' மேலே பேச முடியவில்லை அவளால். குலுங்கிக் குலுங்கி அழுதாள்.

''அழாதே! மல்லிகா! அழாதே! நீ அழுவதை என்னால் தாங்கிக் கொள்ள முடியாதம்மா!'' அவருடைய குரல் தழுதழுத்தது.

''அழுவதற்காகவே பிறந்தவள் அப்பா நான். எப்படி அழாமல் இருக்க முடியும்? இல்லாவிட்டால் பிறந்தவுடனேயே.... தாயைப் பலி கொடுத்திருப்பேனா? அந்தத் துரதிருஷ்டம் இன்னமும் தொடர்ந்து கொண்டேதான் அப்பா இருக்கிறது. என்னைப் போய் அழாதே என்கிறீர்களே?''

''உன்னை மறுபடியும் சிரிக்க வைப்பேன் மகளே.... சிரிக்க வைப்பேன்.'' துயரம் அவரைத் திக்குமுக்காட வைத்தது.

''என்னப்பா இது?'' துடித்துப் போகிறாள் மகள்.

''ஒன்றுமில்லையம்மா... ஒன்றுமில்லை...'' தம்மைச் சமாளித்துக் கொண்ட பிறகு மகளிடம் வந்தார் பரமசிவம். அவள் கையிலிருந்த டிசம்பர் கனகாம்பரச் சரத்தைப் பிடுங்கி அவளுடைய தலையில் சூட்டினார்.

''ஐயோ, அப்பா....'' அனலிடைப் புழுவாகத் துடித்தாள் அந்தப் பூங்கொடி.

அவளைச் சமாதானப்படுத்திய பரமசிவம் அலமாரியின் அருகில் சென்று அதற்குள்ளிருந்து ஒரு பிளாஸ்டிக் டப்பாவை எடுத்து வந்தார். மல்லிகாவின் அருகில் வந்து அதைத் திறந்தார். அதனுள் ஐந்தாறு வண்ணச் சிமிழ்கள் இருந்தன. மகளை ஒரு தடவை உற்றுப் பார்த்தார். பிறகு அந்தச் சிமிழ்களில் ஒன்றைத் திறந்தார். அதன் மூடியிலேயே ஒரு குச்சி மாதிரி நீண்டு இருந்தது. அதில் நீல வண்ணம் படிந்திருந்தது. அதை அப்படியே மல்லிகாவின் வெற்று நெற்றியில் வைத்தார். அந்தப் பொன்னிற நெற்றியின் நடுவில் நீலப் பொட்டு எப்படிப் பளிச்சென்று மின்னியது.

''அப்பா! நீங்க சொல்வது கொஞ்சங்கூட நன்றாக இல்லையப்பா.'' தந்தையின் கரங்களைப் பற்றிக் கொண்டு தடுத்தாள் மல்லிகா.

''எனக்கு இதிலே தவறு எதுவும் இருப்பதாகத் தோன்றவில்லை மல்லிகா. இனி மேல் நீ இதைத் தினமும் உபயோகிக்க வேண்டும்'' என்ற பரமசிவம் அந்தப் பிளாஸ்டிக் டப்பாவை அலமாரியில் வைத்தார்.

மல்லிகா அழுதாள். அழுது கொண்டேயிருந்தாள்.

ஏணையில் தூங்கிக் கொண்டிருந்த குழந்தையும் அழ ஆரம்பித்தது. தன் அழுகையை நிறுத்தி விட்டுக் குழந்தையின் அழுகையை நிறுத்த ஓடினாள் மல்லிகா.

''அக்கா! அக்கா!'' என்று அழைத்தபடி வருகிறார் பரமசிவம்.

''என்ன தம்பி?'' பதற்றத்துடன் கைவேலையைப் போட்டு விட்டு எழுந்திருக்கிறாள் மரகதம்.

''மல்லிகாவைத் தேள் கொட்டி விட்டது. அக்கா. கொஞ்சம் வந்து மந்திரிக்கணும்... வா, அக்கா.''

மறுபடியும் உட்கார்ந்துவிட்டாள் மரகதம்.

''என்னக்கா இது? அங்கே குழந்தை வலி பொறுக்க முடியாமல் துடியாய்த் துடித்துக் கொண்டிருக்கிறாள்....நீ.. என்னடாவென்றால்....''

''தேள் தானே கொட்டியது? அவளைப் பாம்பே புடுங்கியிருக்கணுமே....?''

''அக்கா! என்ன உளறுகிறாய்?''

''உளறலே தம்பி. உளறலே. நேத்து வூட்டுக்கு வந்தேன். அந்தப் பாவி தலைநிறையப் பூவும் நெத்தி நிறையப் பொட்டுமா நின்னுகிட்டிருந்தா. மனுசங்க வேணுமின்னு இந்த அக்குறும்பைப் பாத்துக்கிட்டுச் சும்மாயிருக்கலாம். தெய்வம் சும்மா இருந்துடுமா? அதுக்கே பொறுக்கல்லே... தேளா... வந்து கொட்டிட்டுது.''

''அடிப்பாவி....நீ ஒரு பெண்பிள்ளை தானா....?'' என்று அலறிய பரமசிவம் வந்த வழியே திரும்பி ஓடினார்.

சட்டையை எடுத்து மாட்டிக் கொண்டு கிளம்பினார் பரமசிவம்.

''எங்கே கிளம்பிட்டீங்க....?'' என்று வினவியவாறே உள்ளே நுழைந்தார் வேதாசலம்.

''வாங்க தரகர்ஐயா. உங்களைத்தான் பார்க்கலாம்னு கிளம்பினேன். ஒரு மாதமாய்க் காணவே இல்லீங்களே. ஒருகால் விஷயத்தையே மறந்து விட்டீர்களோ, என்னமோ....ஞாபகப்படுத்தி விட்டு வரலாம் என்றுதான் புறப்பட்டேன்.''

''அது எப்படி விஷயத்தையே மறந்துவிட முடியும் பரமசிவம்? காரியம் கிட்டி முட்டி வருகிற மாதிரி இருந்தால் ஓடி வந்திருக்க மாட்டேனா?''

''நீங்க சொல்வதைப் பார்த்தால்....''

''நிபந்தனை பலமாகத்தான் இருக்கிறது.''

''நான்தான் முன்னமேயே சொல்லியிருக்கிறேனே. எனக்கு மல்லிகாவைத் தவிர வேறு யாரும் சொந்த பந்தம் கிடையாது. அதனாலே என்னிடம் இருக்கிறதை அவளுக்கே தந்து விட்டுப் போகிறேன்....''

''அதைப் பற்றி இப்போதைக்கு என்ன பரமசிவம். எல்லாம் கடைசியிலே உன் மகளைத் தானே சேரப் போகிறது....''

''பின்னே என்ன நிபந்தனை தரகரய்யா?''

''உன் பேத்தி தான் உன் மகளின் மறுவாழ்வுக்குத் தடையாக இருக்கிறது பரமசிவம். நான் என்ன செய்யட்டும்?''

''சொல்லுங்கள் தரகரய்யா.''

''பேசாமல் ஓர் அனாதை விடுதியில் கொண்டு போய்ச் சேர்த்து விடேன்.''

''தரகரய்யா!'' தவியாய்த் தவித்தார் பரமசிவம்.

''இரண்டாந்தாரமாக ஒருவன் கட்டிக் கொள்ள முன்வருவதே ரொம்ப அதிசயம். பரமசிவம். கூடவே குழந்தையையும் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று நாம் நினைக்கிறது ரொம்பப் பேராசை இல்லையா?'' தரகரய்யா உண்மை நிலையைத்தான் பிட்டுப் பிட்டுவைத்தார். ஆனால் அதைச் ஜீரணிக்கும் போது தானே அதன் உண்மை சொரூபம் தெரிகிறது. நம் இனம் இவ்வளவுக்குக் கீழேயே இருக்கிறது என்கிற உண்மை கசப்பாகத்தானிருந்தது பரமசிவத்துக்கு. அதற்காக அது உண்மை இல்லையென்றாகி விடுமா?''

''ஒன்று செய்யலாமா தரகர் ஐயா!''

''என்ன செய்யப் போகிறாய்?''

''என்னிடம் இருப்பதையெல்லாம் அந்தக் குழந்தையின் பெயரில் எழுதி வைத்து விட்டு அதை ஏதேனும் ஒரு நல்ல ஹாஸ்டலில் சேர்த்து விட்டால்...?''

''வெறும் மல்லிகாவை யாரப்பா சீண்டுவான்....?''





''அட, கடவுளே! ஆறு மாதக் குழந்தை அது! அதுவா அவர்களுக்கு ?'' பரமசிவத்தால் சகித்துக் கொள்ளவே முடியவில்லை, அவர் சொல்வதை.

''அது யாரோ ஒருவனின் குழந்தையாச்சே பரமசிவம்!''

''இரண்டாந்தாரமாக வாழ்க்கைப்படுகிற பெண்கள் யாரோ ஒருத்தியின் குழந்தையைத் தன் குழந்தையாகப் பாவித்து வளர்க்கவில்லையா?''

''யார் இல்லையென்று சொல்ல முடியும்? வளர்க்கிறாங்கதான். பெண் பிள்ளைகளாலே அது முடிகிறது. ஆண் பிள்ளைகளாலே அது முடியவில்லையே... அந்தக் குழந்தை இல்லையென்றால்....நாளைக்கே மல்லிகாவுக்கு மாப்பிள்ளையைக் கொண்டு வந்து இங்கே நிறுத்துவேன்... பரமசிவம்.''

''அந்தக் குழந்தையை நான் என்ன செய்ய முடியும் தரகரய்யா.?'' பரிதாபமான குரலில் கேட்டார் பரமசிவம்.

''சொன்னால் தப்பாக நினைத்துக் கொள்ள மாட்டாயே....?''

''வெறும் மல்லிகாவா என் மகள்! பத்தொன்பது வயதுகூட நிரம்பாத அழகுக் கனி தரகரய்யா அவள்.!''

''அநுபவிக்காத அழகுகளையே காசு இல்லாவிட்டால் யாரும் சீண்டுவதில்லை. அநுபவித்த அழகை – வெறும் அழகுக்காகவும் இளமைக்காகவும் யாரப்பா வருவான்....?''

''அப்ப என்னதான் செய்யறது....?''

உடைந்த உள்ளத்தின் நிராதரவான மொழிகளைப் பரமசிவம் உதிர்த்தார்.

''முதலில் குழந்தைக்கு ஒரு வழி பண்ணப்பா. அப்புறம்தான் உன் மகளைப் பற்றி யோசிக்க முடியும்....'' என்ற தரகரய்யா இருக்கையை விட்டு எழுந்து விட்டார்.

சிலையாக உட்கார்ந்திருந்தார் பரமசிவம்.

“உங்களுக்கு ரொம்பப் புண்ணியமுண்டு சம்பந்தியம்மா. கொஞ்சம் பெரிய மனசு வைத்து....''

''சொன்னதையே திரும்பத் திரும்பச் சொல்வதில் ஒன்னும் பிரயோசனமில்லே. எனக்கோ

# அறுவை தரும் ஆனந்தம்!

கே: இன்னும் கொஞ்ச நாளில் சாலையில் ஒயர்கள் அறுந்து விழலாம். ஏன்?
ப: ''கத்திரி'' வெயில் வரப் போகிறதே!

கே: மவுண்ட் ரோட்டில் 'ஈ'க்களே கிடையாது. ஏன் தெரியுமா?
ப: 'ஃப்ளை' ஓவர் வந்து விட்டதே!



கே: காக்கைகள் ஏன் மழையில் பறப்பதில்லை?
ப: காகம் கரையும்.

கே: ஏண்டா, ஸ்டேஷன்லே போய் டிக்கட் வாங்கிட்டு வர இவ்வளவு நேரம்?
ப: 'சென்ட்ரல்'-ல எல்லாம் ஒரே மழைப்பா!
கே: நீ ஓரமா ஒதுங்கி வரது நானே?

— பி. ப. சுந்தர்

வயதாகி விட்டது. நானே என் பெரிய மகனுக்கு இப்போது ஒரு சுமையாக இருக்கிறேன். இந்த லட்சணத்தில் அந்தக் குழந்தையை வளர்க்கிற பொறுப்பை நான் எப்படி ஏற்றுக் கொள்ள முடியும்? அதுவும் அது ஒரு பெண் குழந்தையாக வேறு இருக்கிறது.''

''உங்களுடைய மகனிடம் கேட்டுப் பாருங்க சம்பந்தியம்மா!'' என்று கெஞ்சுகிறார் பரமசிவம்.

''அவசியமே இல்லே. இரண்டு குழந்தைகளுக்கு மேலே வேண்டாம் என்று குடும்பக்கட்டுப்பாடு ஆபரேஷன் செய்து கொண்டிருப்பவனிடம் போய் இதைக் கேட்டுத்தானா தெரிந்து கொள்ள வேண்டும்!''

''அப்ப என் மகளின் கதி?''

''மேலே படிக்க வைத்து வேலைக்கு அனுப்புங்க. அதுதான் இரண்டு குடும்பங்களுக்குமே கௌரவமாக இருக்கும்.''

''வேலைக்குப் போனால் வருமானம் கிடைக்கும். வாழ்வு கிடைக்குமா?''

''அவள் வாழக் கொடுத்து வைத்திருந்தால் என் மகன் இப்படி அல்பாயுசுலே போயிருப்பானா?''

''இதுவே உங்களுடைய மகனுக்குப் பதிலாக என் மகள் போயிருந்தால்?'' பரமசிவத்தின் அடி வயிறு எரிய ஆரம்பித்தது.

''கண்டிப்பாக அப்போது என் பேத்தியை உங்களிடம் ஒப்படைக்க இப்படிக் கெஞ்சிக் கொண்டிருக்க மாட்டேன்.'' சொல்லிக் கொண்டே உள்ளே போய்விட்ட சம்பந்தி அம்மாளை வெறிக்கப் பார்த்துக் கொண்டு செயலற்று நின்றார் பரமசிவம்.

குழந்தைக்கு உடை மாற்றிக் கொண்டிருந்தாள் மல்லிகா.

''மல்லி!''

''என்னப்பா?''

''குழந்தைக்குத் திருப்பதியிலே முடியிறக்கணும்னு சொன்னாயேயம்மா.''

''ஆமாம்ப்பா. ஆனால் அதுக்கு இப்போ ஒண்ணும் அவசரமில்லேயப்பா.''

''கோவிந்தசாமி நாளைக்குத் திருப்பதிக்குப் போகிறாராம். நானும் கூடவே போய் இவளுக்கு முடியிறக்கிக் கொண்டு வந்து விடுகிறேனே....''

''வேண்டாம்ப்பா.''

''ஏம்மா வேண்டாங்கிறாய்?''

''நீங்க எவ்வளவோ சாமர்த்தியமாகத்தான் எனக்குத் தெரியாமல் எல்லாவற்றையும் செய்து பார்க்கிறீங்க. ஆனால் எப்படியோ எனக்கு எல்லாமே தெரிந்து போய்விட்டது, அப்பா.''

''மல்லி.....''

''உங்களுக்கு உங்க பெண் மேலே இருக்கிற பரிவும் பாசமும் எனக்கும் என் பெண் மேலே இருக்காதா அப்பா?''

''எல்லாம் உன் நன்மைக்காகத்தான், அம்மா!''

''அதை நான் சந்தேகிக்கவில்லே அப்பா. ஆனால்....'' மேலே பேச முடியாமல் தடுமாறினாள் மல்லிகா.

அவளாகவே சொல்லட்டும் என்று காத்திருந்தார் அவர்.

''நான்....நான்... இப்போ வாழ்வுக்காக ஏங்குகிற வெறும் பெண் மட்டுமல்ல அப்பா. நான்....நான்... ஒரு தாயும்கூட அப்பா.''

''உன் நிலைமை எனக்குப் புரிகிறது மகளே. ஆனால்.....''

''உங்களுடைய மனமும் எனக்குப் புரிகிறது அப்பா. எனக்கு இப்போது தேவைப்படுவது மணவாழ்வு அல்ல. ஒரு... ஒரு வாழ்க்கைத் துணை. என் குழந்தையின் பாதுகாப்புக்கு அதற்கு ஓர் அப்பா. அதைத் தர முடியாத வாழ்வு...அது எப்படிப்பட்டதாக இருந்தாலும் எனக்கு வேண்டாம் அப்பா.''

''சுயநலமே உருவான ஆண்களிடம் அப்படியொரு பாதுகாப்பை நீ எதிர்பார்க்க முடியாது அம்மா.''

''நான் எதிர்பார்க்கவில்லேயே அப்பா. மலர்கிற மலர்கள் முழுதும் கனியாவதில்லை அப்பா. சில மொட்டிலேயே கருகி விடுவதும், சில மலர்ந்த பின் கருகி விடுவதும் இயற்கையின் நியதியாகத்தான் இருந்து வருகிறது. இதை ஏன் நீங்க புரிந்து கொள்ள மறுக்கிறீர்கள்?'' மடியில் தூங்கி விட்டிருந்த குழந்தையை எடுத்துப் போய் ஏணையிலிட்டு ஆட்டினாள் மல்லிகா.

''அப்படியானால் என் முயற்சியெல்லாம் வீண் தானம்மா? இதுதான் உன் முடிவா?'' என்று பரமசிவம் தடுமாறினார்.

''இது என் முடிவல்ல அப்பா. நம்ப சமூகம் என் போன்றவர்களுக்கு வழங்கியிருக்கிற முடிவு இது. நீதியும் நியாயமும் இதுதான். மலரும் மங்கையும் ஒரு சாதியாம். உங்களுக்குத் தெரியாதா?'' விரக்தியாகச் சிரித்தாள் மல்லிகா.

வேதனையால் புழுங்கினார் பரமசிவம்.

# பிறந்த 3ம் மாதம் தொடங்கும் முதல் திட உணவு குழந்தையின் வருங்கால வாழ்வையே தீர்மானிக்கத் தக்கது.

## பால் மட்டும் கொடுத்தால் போதாது என்கிறார்கள் டாக்டர்கள்



**டாக்டர்கள் சிபாரிசு செய்வது**

# ஃபாரெக்ஸ்®

**விரைவான முழு வளர்ச்சிக்கான**
**சரிவிகிதச் சத்து நிரவிய திட உணவு**



பச்சிளம் தேகமும் மூளையும் வேகமாக வளரத் துடிப்பவை. அதற்கு ஈடுகொடுக்கப் பால் மட்டும் போதுமானதாகாது. தாய்ப்பாலிலிருந்து கெட்டி உணவுக்கு மாறவேண்டும்—மூன்றும் மாதமே; மென்றுதின்னப் பழக்குங்கள்...மேன்மையான வளர்ச்சிக்குத் திறவுகோலாக உதவும் திட உணவு ஃபாரெக்ஸ் ஒன்றுதான்—பச்சிளம் சீரண உறுப்புகளுக்கு உகந்தது.

**டாக்டர்கள் சிபாரிசு செய்வது ஃபாரெக்ஸ்; காரணம்,**
தாய்ப் பால் விடுக்கும் தலையாய மாதங்களில் பாப்பாவின் பத்துவித வளர்ச்சிகளுக்கும் நிறைவுதரும் **ஒப்பற்ற சரிவிகிதச் சத்துணவு இதுவே.**
இரத்தச் செழிப்புக்கும் தென்புக்கும் கச்சிதமான அளவுக்கு (இதுபோன்ற வேறெந்தத் திட உணவிலும் அமையாத அளவுக்கு) இரும்புச் சத்து; எலும்புக்கு உறுதியும், பல்லுக்குப் பலமும் தரும் கால்ஷியம், வைட்டமின் D2; மூளையும் உடலும் விரைந்து வளர உகந்த புரதச் சத்துக்கள்; வளரும் உடம்புக்குத் தேவையான சக்தி—இவ்வளவும் அடங்கியது ஃபாரெக்ஸ்; எனவே... பாலூட்டும் பழக்கத்தை மாற்றுவதற்கான வேறு எந்த திட உணவையும் விட அதிகமாக அதிகத் தாய்மார்கள் ஆதரிப்பது ஃபாரெக்ஸ்.
பழங்கள், காய்கறிகள், பருப்பு, இறைச்சி, முட்டை போன்ற எந்த முக்கிய உணவுடனும் கலந்து கொடுக்க இனிமையானது ஃபாரெக்ஸ்.
மென்றுதின்னப் பழக்க...கூடிய விரைவிலே குடும்ப உணவுகளிடம் குழந்தையை இனிதே வரவேற்க...
**அதி உன்னதமான முதல் திட உணவு ஃபாரெக்ஸ்.**

**இலவசமான எமது ஃபாரெக்ஸ் கைப் புத்தகம், 2-ரூபா தள்ளுபடித் திட்டம்—இரண்டையும் பற்றி அறிய, எழுதுங்கள்.**
(புத்தகம், எந்த மொழியில் எனக் குறிப்பிட்டு) உங்கள் பெயர், விலாசத்தை எழுதி, 25 பைசா தபால் வில்லையோடு அனுப்புக இம் முகவரிக்கு: தபால் பை நம்பர் 19119, பம்பாய் 400 025.




கிளாக்ஸோ

LIL.GF. 53-140 TM

# லட்சக் கணக்கானோர் விரும்பும் பல்ப்!



# பிலிப்ஸ் பல்புகள்




செலவிடும்
பணத்திற்கு
பூரண மதிப்பு




பிலிப்ஸ் இந்தியா லிமிடெட்

## பிலிப்ஸ்

PHL 1869A

# கறுத்த மேனி வெளுப்பது ஏன்?

இருபது வயது இளைஞன் சிவகுமார். கருத்த மேனி. கழுத்திலும் கன்னத்திலும் படர்ந்திருந்த வெண்மையான திட்டுக்களைச் சுட்டிக் காட்டி, ''மூன்று நான்கு மாதங்களுக்குள் இப்படி ரூபாய் அளவுக்கு வளர்ந்து விட்டது, டாக்டர்! இப்படியே உடம்பு முழுதும் சருமம் பல இடங்களில் வெளுத்து விடுமோ என்று பயமாக இருக்கிறது'' என்றான் கவலையுடன்.

சிவகுமாரின் தாய், தந்தை இருவருக்கும் சருமத்தில் இம்மாதிரி வெண்மை படர்ந்திருக்கவில்லை என்பதைக் கேட்டுத் தெரிந்து கொண்டேன்.

''எனக்கு 'வெண் குஷ்டம்' என்று கருதி என் நெருங்கிய நண்பர்கள் கூட என்னை விட்டு ஒதுங்க ஆரம்பித்து விட்டார்கள். என் மூலம் இது மற்றவர்களுக்குப் பரவக் கூடியதா டாக்டர்?'' என்று வேதனை தோய்ந்த குரலில் வினவினான் சிவகுமார்.

''இதனை வெண் குஷ்டம் என்று கூறுவதே தவறு. குஷ்டநோய்க்கும் இதற்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை. இது ஒட்டுவார் ஒட்டி அன்று. காற்று, நீர் இவற்றால் மற்றவர்களுக்குப் பரவாது. சருமத்தின் மேல் பகுதியில் உள்ள 'செல்கள்' மேனிக்கு இயல்பான வண்ணத்தை அளிக்கின்றன. அந்த 'செல்' (Cell)களின் இயக்கம் தடைபட்டு அல்லது குன்றி விட்டால் சருமம் வெளுத்துப் போகிறது. மேல் பூச்சுக்கும் உள்ளுக்குச் சாப்பிடவும் மருந்து எழுதிக் கொடுக்கிறேன். அல்ட்ரா வயலெட் கதிர் சிகிச்சையும் செய்து கொள்ள வேண்டும்.''

''எத்தனை மாதங்களுக்குச் சிகிச்சை நீடிக்கும், டாக்டர்?''

''சுமார் ஓராண்டு காலம் சிகிச்சை தேவைப்படும். மேல் பூச்சு மருந்து சருமத்தின் வெண்மையை மாற்ற உதவும். மாத்திரைகள் 'பிக்மெண்ட் செல்'களின் இயக்கத்தைத் தூண்ட உதவும். சூரியனின் ஒளிக் கதிர்கள் உங்கள் மேனியில் படுவது நல்லது. மேல்பூச்சு மருந்தைத் தடவிக் கொள்ளாத போது, கதிரவன் ஒளி சருமத்தில் விழும்படி மாலையில் உலாவுங்கள்'' என்று மருந்து எழுதிக் கொடுத்துச் சிவகுமாருக்கு விடையளித்தேன்.

''சருமத்திலுள்ள 'பிக்மெண்ட் செல்'களின் இயக்கம் தடைப்படுவதால் சருமம் வெளுக்கிறது என்றீர்கள். செல்கள் இயக்கமற்றுப் போகக் காரணம் என்ன? நல்ல ரத்த ஓட்டமுள்ள இளைஞர்களுக்கும் இந்த நோய் வரக் காரணம் என்ன?''

'' 'லூகோடர்மா' எனப்படும் இது மூன்று வகைப்படும். (1) பிறவியிலேயே ஏற்படுவது. (2) விபத்துக்களின் காரணமாக, உடலில் அடிபட்டால், காயம்பட்ட இடத்தில் சருமம் வெளுப்பது. (3) காரணமின்றியே தோன்றுவது. இந்த மூன்றாவது வகை விடிலிகோ. (Vitiligo) எனப்படும். முதல் வகையினருக்கு, சூரிய வெளிச்சம் மேனியில் படாமலிருத்தல் நல்லது. மற்றவர்களுக்குக் கதிரவன் ஒளி நலம் பயக்கும். பொதுவாக, 15 முதல் 25 வயது வரையிலுள்ளவர்களுக்கே இந்த நோய் மிகுதியாக ஏற்படுகிறது. 'பிக்மெண்ட் செல்'கள் இயக்கமற்றுப் போவதற்கான காரணம் இன்னதுதான் என்று திட்டவட்டமாகக் கூறுவதற்கில்லை.''

''இது வராமல் தடுக்க வழியுண்டா?''

''ஓரளவு முன்னெச்சரிக்கையுடன் இருப்பது நல்லது. வைட்டமின் 'சி' (Vitamin C) மிகுதியாக உட்கொள்வது தவிர்க்கப்பட வேண்டும். ஒரு நாளைக்கு 100 மில்லி கிராமுக்கு அதிகமாக உட்கொள்வது கூடாது... 'சிங்கப்பூர் செருப்பு' எனப்படும் ரப்பர் செருப்புகளை அணிவது தவிர்க்கப்பட வேண்டும். ரப்பர் தொழிற்சாலைகளில் ரப்பரின் வண்ணத்தைக் களைந்து வெண்மையாக்க ஒரு ரசாயனப் பொருளைப் பயன்படுத்துகிறார்கள். நீண்ட காலம் தொடர்ந்து ரப்பர் செருப்பு அணிந்தால் பாதத்தின் மேல் பகுதியில் சருமம் வெளுப்பாக மாறும் வாய்ப்பு உண்டு. ஆனால், ரப்பர் செருப்பு அணிவதை நிறுத்திய பிறகு சிறிது காலத்தில் சருமம் இயல்பான நிறத்தை எவ்விதச் சிகிச்சையுமின்றியே அடைந்து விடுவதுண்டு.''

''பிளாஸ்டிக் செருப்பு, கைக்கடிகாரப் பட்டை இவற்றால் சருமம் வெளுக்குமா?''

''பிளாஸ்டிக் பொருளால் வெளுப்பதில்லை. ஆனால், நைலான் முதலிய செயற்கை உடுப்புக்கள் சருமத்துக்கு உகந்தவையன்று. இம்மாதிரியான சட்டைகளைக் கழற்றும்போது முழங்கைக்குக் கீழேயுள்ள பகுதியில் ரோமங்கள் குத்திட்டு நிற்பதைப் பார்க்கலாம். உடலில் 'சார்ஜ்' ஆகியுள்ள மின் அமைப்பு நைலான் முதலிய செயற்கை இழை ஆடைகளால் பாதிக்கப்படுவதே காரணம்.''



"இந் நோய் பெற்றோருக்கு இருந்தால் குழந்தைகளுக்கு வருமா?"

"சுமார் 30 சதவீதம் பேர்களுக்கு வருகிறது – பெற்றோர்க்கு இருந்தால். தாய் தந்தை இருவருக்குமே இருந்தால், பிள்ளைகளுக்கு வரும் வாய்ப்பு அதிகம். ஆனால் பிறப்பால் தோன்றக் கூடியது பற்றி நிச்சயமாக ஏதும் ஜோஸ்யம் கூறுவதற்கில்லை."

"இந் நோய் கண்டவர்களுக்குச் சிகிச்சை என்ன? அது எந்த அளவுக்குக் குணமளிக்கிறது?"

"உடலின் ஒரு பகுதியில் மட்டும் சிறிதளவே சருமம் வெளுத்தால், தசையைக் கொண்டு செதுக்கி ஒட்டுவதன் மூலம் (Skin graft) குணமளிக்க முடியும். ஆனால் பின்னர் வேறு இடங்களில் சருமம் வெளுக்க ஆரம்பித்தால் இச்சிகிச்சை பயன் தராது. பச்சைக் குத்துவதும் இதற்கு ஒருவிதச் சிகிச்சை முறையாகும். வால்நட் ரசம் சருமத்தின் வெண்மையைப் போக்க உதவும். வெளுத்த சருமத்துக்கு வண்ணமூட்ட. இயற்கை தோற்றுவித்துள்ள மிகப் பெரிய, அரிய சாதனம் சூரியன். கதிரவன் ஒளி கணிசமான பலனளிக்க வல்லது. பல வருடங்கள் தொடர்ந்து சிகிச்சை பெற்றும் சிலருக்குக் குணம் ஏற்படுவதில்லை என்பதும், சிகிச்சை ஏதுமின்றியே சிலர் ஆச்சரியப்படத் தக்க முறையில் தாமாகவே குணம் பெற்று விடுகிறார்கள் என்பதும் குறிப்பிடத்தக்கது.

**டாக்டர் ஏ.எஸ். தம்பையா கூறக் கேட்டு**
**எழுதியவர் : ஆர். பி.**

# ஒளிமயமான எதிர்காலம்

சித்ரமகாலின் இந்தப் படத்தில், சௌகார் ஜானகியும், தேங்காய் சீனிவாசனும் தான் முக்கியமான பாத்திரங்கள்.

ரிடையர்டு ஜட்ஜ் வெங்கட்ராமன் பாத்திரத்தில் தேங்காய் சீனிவாசன் அற்புதமாக நடித்திருக்கிறார். 'ஜீ' என்ற எழுத்துப் பதித்த மோதிரம் படத்தில் முக்கிய பங்கு வகிக்கிறது.

அவர் நடத்தையில் சந்தேகம் கொண்டு, "அப்பா, இனிமேல் அம் மோதிரத்தை நீங்கள் அணிந்து கொள்வதில் அர்த்தமில்லை" என்று சொன்னதைக் கேட்டு ஜட்ஜ் துடித்ததைச் சீனிவாசன் அருமையாக வெளிப்படுத்துகிறார்.

சீதாவின் பிறப்பு பற்றிய ரகசியம் தான் படத்தின் ஜீவநாடி. 'சஸ்பென்ஸை' வெளியிடாமல் மூடி மூடி வைத்துக் கடைசி வரையில் இழுத்துக் கொண்டு போகின்றனர். என்னத்தைச் செய்ய! சோதனைதான்.

அபாக்கியவதி லக்ஷ்மியாக வந்து திரைக் கதையின் சோக ரசத்தின் ஏகப் பிரதிநிதியாயிருப்பவர் சௌகார் ஜானகி.

மேஜரின் பிள்ளை ஸ்ரீராமனும், ஜட்ஜின் பெண் சீதாவும் குழந்தைப் பருவத்திலிருந்தே ஒன்றாய் விளையாடிப் பழகியவர்கள். அதற்காக இப்படியா? வாலிப வயதை அடைந்த பின்பும்கூட 'மா'வும் 'டி'யும் நன்றாயில்லையே!

நாடக நடிகராக வரும் சுருளிராஜனும், மனோரமாவும் வரும் காட்சிகள் ஒரே கலாட்டாவாயிருக்கின்றன.

கவுனும், பாண்ட்டும் போட்டுக் கொண்டு வரும் ஸ்ரீப்ரியா புடவை கட்டிக் கொள்ள ஆரம்பித்ததும் நடிப்பு நன்றாயிருக்கிறது.

ரிடையர்டு மேஜராக வரும் அசோகன் மிகவும் கண்யமாக நடித்திருக்கிறார்.

விஜயகுமாருக்கு இந்தப் படத்தில் அதிக வேலையில்லை.

பழைய வெற்றிப் படங்களின் பாடல்களைக் கொஞ்சம் கொஞ்சம் மாற்றியமைத்துச் சில வரிகளைப் பாடச் செய்து தம் பாடல்களுக்குச் சுவை சேர்ப்பது சித்ரமகால் கிருஷ்ணமூர்த்திக்குக் கைவந்த கலை. இந்தப் படத்திலும் அந்த உத்தியைக் கையாண்டு ரசிகர்களின் கையொலியைப் பெறுகிறார். திரைக்கதை, டைரக்ஷன் இரண்டும் சித்ரமகால் கிருஷ்ணமூர்த்தியினுடையவை. கதை, வசனம் சி. ரகுநாதனுடையவை.

வாணிஜெயராம் பாடும் "வைஷ்ணவ ஜனதோ" படத்துக்குக் களை சேர்க்கிறது. படத்தின் தலைப்பு நன்றாயிருக்கிறது. படம்? சுமார். —**காந்தன்**



# அன்றும் இன்றும்



நேற்று நிறுவப்பட்டது ஜோதி யூனிபில்ட் பம்பு



இன்றே காணமுடிந்தது இன்ப நாள் இதனை

முன்னேற்றத்தின் இரகசியம்—

# ஜோதி யூனிபில்ட் பம்பு

வெற்றி மிகு ஜோடி



ஜோதி
யூனிபில்ட்
பம்பு



ஜோதி
ஸ்டார்ட்டர்

ஆழ ஈர்ப்பு (டீப் ஸக்ஷன்) மூலம் செவ்வனே நீரிறைக்கும் திறன், அன்றாடப் பழுதுபார்ப்புத் தொல்லைக்குத் தீர்வு, மின்சாரச் செலவுகளிலே மிச்சம், நீடித்த ஆயுள்—இவை யாவும் ஜோதி யூனிபில்ட் பம்புகளிலே கிடைக்கும் முக்கிய நன்மைகள். இக் காரணத்தினால் தான் ஜோதி பம்பு காப்பியடிக்கப் படுகிறது. ஜோதி ஆராய்ச்சி நிலையத்தின் ஓயாத முயற்சிகளின் பயனாக, எப்போதுமே விவசாயிகள் இந்தப் பம்பையே கோருகின்றனர்.



## ஜோதி லிமிடெட், பரோடா

ஹைட்ராலிக்ஸ் • எலக்ட்ரிகல்ஸ் • பவர் எலக்ட்ரானிக்ஸ்

everest/24r2/JY-tm

கிளை 33, நுங்கம்பாக்கம் ஹைரோடு, சென்னை-600 034. போன்: 85007
விற்பனையாளர்கள்: வி. வி. & கோ., XXX/613, மகாத்மா காந்தி ரோடு, கொச்சி 682 016.
ஆட்டோமேட்டிக் பம்ப் ஸ்பெஷலிஸ்ட்ஸ், நம்பர் 4, பாண்டி பஜார், தி. நகர், சென்னை 600 017;
ஜெயலட்சுமி டிரேடர்ஸ், நம்பர் 2, எர்ரபாலு செட்டி ஸ்ட்ரீட், சென்னை 600 001; ராஜம் & கோ.,
61, சதி ரோடு, ஈரோடு; மேலக்கடை எலக்ட்ரிகல்ஸ், 215, மெயின் ரோடு,
பெண்ணாடம் 606 105; ஆகட் ஏஜன்ஸீஸ், நம்பர் 8, கீழ கொழும்பு ஸ்டோர்ஸ், மாயூரம்;
பெர்மியர் இண்டஸ்ட்ரீஸ், 80/81, செம்புதாஸ் ஸ்ட்ரீட், சென்னை 600 001;
முருகன் ஆட்டோமேட்டிக்ஸ், காளியம்மன் கோயில் ஸ்ட்ரீட், உசிலம்பட்டி.

# கிளர்ச்சியூட்டும் காட்டன்ஸ் அளிப்பதோ சென்சுரி

**சூட்டிங்குகள்**—கற்பனை வளம் நிறைந்த டிசைன்களும் செஞ்சுரி பருத்தியின் குளுமையான சுகமும் பரிபூரணமாக இணைந்தவை

**ஷர்ட்டிங்குகள்**-திகைக்க வைக்கும் கோடுகள் மனதை மயக்கும் கட்டங்கள். எண்ணற்ற தினுசுகள்-இவை எல்லாமே சேர்ந்து, செஞ்சுரி பருத்தி எண்ணிலா வண்ணங்களில் குன்றாத ஒளி பெற்றுத் திகழ்கின்றது.

**புடவைகள்** பருத்தியின் சுகபோக இதம்-ஆம் உங்களுக்கு செஞ்சுரி மட்டுமே இந்த சுகத்தை அளிக்க முடியும். செஞ்சுரி புடவை உங்கள் எழில் உடலை ஒட்டித் தழுவ, கிளுகிளுப்பூட்டும் மகிழ்ச்சியிலே திளைக்கிறீர்கள். நெருப்பை எதிர்த்து உழைக்கும் அக்னியவிரோதக் புடவைகளும் உண்டு.

**ஆடை அணி வகைகள்** ஜீவன் ததும்பும் டிசைன்கள், களிநடம் புரியும் வண்ணங்கள். செஞ்சுரி பருத்தியின் மென்மையும் உணர்ச்சியைத் தொடும் சிறப்பும் உங்களை என்றும் மகிழ்விக்கும்.

**தி சென்ச்சுரி ஸ்பின்னிங் & மான்யுபாக்சரிங் கோ. லிட்.,**
**பம்பாய் 400 025**



செஞ்சுரி
நூற்றுக்குநூறு
பருத்தித்
துணிமணிகள்.

national-913-Tamil

ஒரு பாண்டியனுக்குப் பொழுது போகவில்லை. நடனம் பயின்றான். அப்போதுதான் கால்வலி தெரிந்தது. தனக்கே இவ்வளவு வலி என்றால் நாளும் பகலும் ஓயாமல் ஆடும் நடராஜனுக்கு எவ்வளவு வலி இருக்கும் என்பதை மனத்தால் அளந்து பார்த்தான் பாண்டியன். அவ்வளவுதான் கால் மாறி ஆட வேண்டும் என்று நெஞ்சுருகக் கதறி, கடவுள் கேட்காவிட்டால் தற்கொலைதான் முடிவு என்று பயமுறுத்தவும் பயமுறுத்தினான். அவனைத் தம் பக்கம் சேர்க்க வேண்டாம் என்ற எண்ணமோ என்னவோ, நடராஜர் இடது பாதத்தை ஊன்றி, வலது பாதத்தைத் தூக்கி, 'மாறி ஆடினார்'. இந்த நடனக் காட்சி, 'மாறி ஆடிய நடராஜ மூர்த்தி'யாகச் சுவாமி சன்னதியில் விளங்குகிறது. —புராண வரலாறு

## 20

**சா**வித்திரி தன் முதுகில் தானே தட்டிக் கொண்டாள். லாவண்யாவை அவள் ரமணியின் பாதையிலிருந்து சாதுரியமாக அப்புறப் படுத்தியாகி விட்டது. இன்னும் ரமணி, 'லாவண்யா, லாவண்யா' என்று கிளிப்பிள்ளையைப் போலச் சுற்றிக் கொண்டிருந்தால் அவனுடைய தலையில் ஏழெட்டு நாட்களுக்கு எலுமிச்சம் பழம் தேய்க்க வேண்டியது தான். ஆனால் அதற்கு அவசியம் இருக்காது. ரமணியும் அவளைப் போல் ஒரு யதார்த்த வாதிதான். மேலும் சிறு வயதிலிருந்தே அவனுக்கு ஒரு குணம் இருந்தது. ஏதாவது

# மதுர நாயகி

பி.வி.ஆர்



ஒன்றை நினைத்துக் கொண்டு அழுவான். அவனுடைய அப்பாவோ அவளோ மறுத்து விட்டால் இன்னும் கொஞ்சம் அழுது பார்ப்பான். பெற்றோர் அதற்கும் மசியவில்லை என்றால் தளர்ந்து விடுவான். பிறகு எதை நினைத்து அழுதானோ அதை மறந்தே போய் விடுவான். வக்கீல் படிப்பில்தான் அவன் தன் பிடிவாதத்தின் வெற்றியைக் கண்டிருக்கிறான்.

இனி ரமணி லாவண்யாவை, இப்போது இல்லாவிட்டாலும் இன்னும் சில மாதங்களில் மறந்து போய் விடுவான். மறந்துதான் போக வேண்டும்.

சாவித்திரியைப் பொறுத்த வரையில் காதல் ஓர் அபத்தம். நடைமுறை வாழ்க்கைக்கு ஒவ்வாதது. துஷ்யந்தன் — சகுந்தலை ரோமியோ — ஜூலியட் எல்லாம் அதிதமான கற்பனையில் எழுந்த எரிமலைக் காப்பியங்கள். தற்கால உலகத்தில் எந்தப் பெண் பிள்ளைகளும் ஒருவரையொருவர் காதலிப்பதில்லை. ஒருவருக்காக இன்னொருவர் காதலில் காட்ட வேண்டிய தியாக உணர்ச்சியைக் காட்டுவதில்லை. ஆசைக்கும் மோகத்துக்கும் காதல் எனும் திருநாமத்தைச் சூட்டித் தெய்விகம் என்று பிதற்றுகிறார்கள். காதல் தோற்று விட்டால் பண்டைக் காலத்துக் கதைகளில் நடப்பது போல் மரணம் நிகழ்வதில்லை.

வெறும் வெளிக் கவர்ச்சியைக் கண்டு மயங்கி மதம் பிடிப்பது போல் மனிதனுக்கு வெறி பிடித்து விட்டால் அதற்குப் பெயர் காதலா? சாவித்திரிக்கு ரமணி மீது பரிதாபம்தான் ஏற்பட்டது.

அவன் அன்று மாலை ஏழு மணிக்கு வந்ததும், முதல் காரியமாகத் தன் வெற்றியை முரசு கொட்டுவதில் முனைந்தாள்.

''ரமணி!''

''என்னம்மா?''

''லாவண்யா வந்திருந்தாள்.''

''எதுக்கு?''

''என்னைப் பார்க்க.''

''எதுக்கு?''

''நான் அவளை வரவழைச்சேன்...'' என்ற சாவித்திரி, அவசரமாக, ''எதுக்குன்னு கேட்காதே!'' என்றாள்.

''கேட்கலை... நீயே சொல்லு.''

''நீ அவளைக் கல்யாணம் பண்ணிக்க ஆசைப்படறேன்னு எனக்கு நீயே புரிய வைச்சுட்டே. ஆனா அந்தப் பொண்ணு உன்னைப் பத்தி என்ன நினைக்கிறா, அவ மனசிலே உன் மேலே உள்ள ஆசை எந்த அளவுக்குக் கரை புரண்டு ஓடறதுன்னு தெரிய வேண்டாமா? அதுக்குத்தான் வரவழைச்சேன்.''

''தெரிஞ்சுகண்டயா?''

''தெரிஞ்சுக்காம? சொன்னல் நீ அசந்து போவே?''

''மாட்டேன்... அவ என்னைப் பத்தி நினைக்கிறுளோ இல்லையோ அதுவே எனக்குத் தெரியாது... என்னைத் தான் கல்யாணம் பண்ணிக்கணும்னு லாவண்யா துடிக் கலேயில்லேன்னு எனக்கு நன்னுத் தெரியும்.''

இப்போது சாவித்திரி அயர்ந்து போனுள். தான் சொல்லுவதைக் கேட்டதும் ரமணி ஏமாற்றம் அடை வான் என்று சந்தோஷப்பட்டது வீணுயிற்று.

''என்னடா சொல்றே, ரமணி?'' அவளுடைய குரலே கம்மியது.

''எனக்குத் தெரிஞ்சவரை லாவண்யாவுக்கு வேண் டியதெல்லாம் ஒரு நல்ல கணவன். சம்பாதிக்கக் காப் பாத்தக் கூடிய ஒரு நல்ல மனிதன். அவ்வளவுதான். ஏழைமையிலே வதங்கி வதங்கி அவளோட மனசு என்னிக்கோ கருகிப் போயாச்சு... அதிலே ஆசை, மோகம், காதல்ங்கற உணர்ச்சிகளுக்கு இடமே இல்லே!''

''நீ என்ன அவ மனசை லேபரட்டரியிலே விண்டு விண்டு பார்த்து 'ரிஸர்ச்' பண்ணினியோ?''

''நான் எப்படித் தெரிஞ்சுண்டா உனக்கு என்ன? அவகிட்டே என்ன கேட்டே?''

சாவித்திரிக்கு ஆரம்பத்தில் இருந்த அக்கறையும் ஆர்வமும் இப்போது இல்லே. இருந்தாலும் அவள் நடந்ததை யெல்லாம் சொன்னுள்:

''அம்மா?''

''என்னடா ரமணி?''

''நீ ரொம்ப அநாகரிகமா நடந்துண்டிருக்கே...''

''நீ ரொம்ப நாகரிகமா அவகிட்டே பழகியதா நினைப்போ?''

''இல்லே.''

''அப்ப பேசாம இரு. ஹரிணிதான் இனிமே மனைவி.... கறுப்புக் கோட்டு உனக்கு வேண்டாம்னு அடிச்சுண் டேன். நீ கேக்கலே. இனிமே அந்தக் 'கோட்டைக் கழற் றவே கூடாது. இன்னும் புதுசு புதுசாத் தெச்சுப் போட் டுக்கணும்னு, ஹரிணி கழுத்திலே தாலியைக் கட்டு.''

''புலியை நாலா பக்கமும் சுத்தி வளைச்சு வேட்டை யாடற மாதிரி என்னை நீங்களெல்லாரும் சேர்ந்து வேட்டையாடி ஜெயிக்கப் பார்க்கிறீர்கள்.''

அதைக் கேட்டதும் சாவித்திரி வாய்விட்டுச் சிரித் தாள். அவள் சிரித்த சிரிப்பில் கண்களிலிருந்து நீர்கூட வந்துவிட்டது.

''என்னம்மா பெரிசாச் சிரிக்கிறே?''

''நீ, இந்த ஆண்டிலே அடிச்ச பெரிய ஜோக் இதுதாண்டா!''

''அம்மா!''

''பின்னே? உனக்கு நீயே புலி வேஷம் போட்டுண்டா எப்படி? ரமணி, நீ பூனைகூட இல்லே... நீ ஒரு கோழை... பின்னைப் பூச்சிகூட இல்லே.''

''இப்படி யெல்லாம் பெற்ற பிள்ளையை வர்ணிக் கிறியே, இது உனக்கே நன்னு இருக்கா?''

''பக்கத்து வீட்டுப் பிள்ளையை நான் எப்படிடா வர் ணிக்க முடியும்...? சரி, சாப்பிடஉட்காரலாம், வா...நீ மட்டும் லாவண்யா பேரிலே நீ நினைக்கிறபடி கொள்ளை ஆசை வைச்சிருந்தா, இதுக்கு முன்னடியே அவகிட்டே ஏதாவது உளறியிருப்பே! ஹரிணியைப் பத்திப் பேச்சு எடுத்தபோதே. என்னை மடக்கி யிருப்பே! யோசனை பண்ணியிருக்க மாட்டே.... ரெண்டையும் ரெண்டை யும் கூட்டி நாலுன்னு நிச்சயம் பண்ணிக்கிற பிள்ளை தான் எனக்குத் தெரியாதான்னு... சரி சரி சாப்பிட லாம் வா!''

அம்மா அவனை நன்ருக மண்டையில் அடித்து விட் டாள். ரமணிக்குப் பேச்சே எழவில்லே. அம்மா மீது அவனே ஆச்சரியப் படும்படியாகக் கோபமும் வர வில்லே. இதற்குக் காரணம்அவனது இயல்பான குண விசே ஷமா, அல்லது அம்மா சொல்லும் உண்மையின் பலமா?

அவன் மௌனமாக ஹாலே விட்டு வெளியேறினுன். அம்மா செய்த காரியம் தவருனது, அநா கரிகமானது என்று அவன் மனம் நினைத்தது. உடனடியாக ஒரு பரிகாரத்தையோ பிராயச்சித்தத் தையோ அவன் செய்தாக வேண்டும்.

போர்ட்டிகோவில் அம்மாவின் கார் இருந்தது. காருக்குள் எட்டிப் பார்த்தான். ஷெட்டில் அடைக் கும் வரை சாவி காரிலேயேதான் இருக்கும். இப்போதும் இருந்தது. நிதானமாக 'ஸ்டார்ட்' செய் தான்.

''ரமணி!''

''என்ன?''

''எங்கே போறே, லாவண்யா வீட்டுக்குத் தானே? என் சார்பிலே அவகிட்டே மன்னிப்புக் கேட்கத் தானே?''



ரமணி வாய் திறக்கவில்லே. அம்மாவையே பார்த்தான். அவள் இந்தத் தப்பை எதற்காகச் செய் தாள்? அவன் ஹரிணியைப் பண் ணிக் கொள்ள வேண்டும் என்று! ஹரிணியை ஏன் பண்ணிக் கொள்ள வேண்டும் என்று அம்மா நினைக்கிறுள்? ராஜையாவின் மாப்

பிள்ளையாக! ராமையாவின்மாப்பிள்ளையானால் எதிர்காலம் கண்டிப்பாகச் செழிப்பாக இருக்கும். தொழிலில் புகழ். செல்வத்தில் உச்சம். இதையெல்லாம் தான் அனுபவிக்க வேண்டும் என்ற வெறியில் அம்மா செய்யவில்லை. அவன் நன்றாக இருக்க வேண்டும் என்ற ஒரே எண்ணம்தான். பெற்ற வயிறு குளிர வேண்டும் என்ற வெறிதான்.

கார் நகர்ந்தது.

''லாவண்யா கிட்டே வாய் வார்த்தையாலே மன்னிப்புக் கேளு. கால்லே விழுந்துடாதே. நம்ப குடும்பத்துக்கே அவமானம்.''

ரமணி காக்காத் தோப்பை அடைந்த போதுதான் தன் முட்டாள்தனத்தை எண்ணிப் பார்த்தான். லாவண்யாவின் வீட்டில் அவளுடைய அம்மா, அப்பா, நீலா சந்து எல்லோரும் இருப்பார்களே! அவர்கள் முன்னிலையில் லாவண்யாவுடன் எப்படிப் பேசுவது? அவன் பேசினாலும் அவள் பதில் சொல்ல மாட்டாளே!

வாசல் வரையில் வந்தாகி விட்டது. இனித் திரும்ப முடியாது. போய்ப் பார்த்துத்தான் ஆகவேண்டும்.

ரமணி மெதுவாக நடந்து ரேழியைக் கடந்தான். வீட்டில் நிலவிய அமைதி ஒரு தெம்பையும், யாரும் இல்லை என்கிற ஆறுதலையும் அளித்தது. அடுத்த கணமே ஒரு வேளை லாவண்யாவும் இருக்க மாட்டாளோ என்ற பயமும் உண்டாயிற்று.




நீடித்த
அழகுக்குத் தேவை
தூய்மையான மேனி.

# லாக்டோ-காலமைன் ஒன்றுதான் உங்கள் மேனியை அனைத்திலும் அருமையாகப் பாதுகாக்கும்.

உங்கள் மேனியைப் பராமரிக்க லாக்டோ-காலமைன். உங்கள் மேனியைத் தூய்மையாகவும் புதுமையாகவும் வைத்திருக்கக் கூடிய சேர்க்கைப் பொருட்கள் விசேஷ முறையில் இதில் கலக்கப் பட்டுள்ளன. எல்லாம் ஒன்றில் இணைந்த அழகுப் பராமரிப்பு-லாக்டோ காலமைன்–அஸ்ட்ரின்ஜெண்ட், மாயிஸ்சரைஸர், ∴பவுண்டேஷன் க்ரீம் மூன்றும் இணைந்த தன்னிகரற்ற அழகு சாதனம்.

அதனை முறையாக உபயோகித்து வரவும். உங்கள் மேனி இயற்கையாக மெருகேறுவதைக் கண்கூடாகக் காண்பீர்கள்.




3 வசதியான சைஸ்களில் கிடைக்கிறது:
110 மி.லி.
60 மி.லி. 28 மி.லி.

க்ருக்ஸ் லாக்டோ-காலமைன், ஒரு ரெஜிஸ்டர்டு டிரேடு மார்க். இதனைத் தவறுகப் பயன்படுத்துபவர்கள் சட்டப்படி தண்டிக்கப் படுவார்கள்.



உண்மையான லாக்டோ-காலமைன் தானா என்று உறுதி செய்து கொள்வதற்கு, எப்போதும் இந்த க்ருக்ஸ் சின்னத்தைப் பார்த்து வாங்குவீர். அதோடு, க்ருக்ஸ் முத்திரையும் உடையாமல் இருக்கிறதா என்று உறுதி செய்து கொள்ளுங்கள்.

டுஃபார்-இன்டர்ஃப்ரான் லிமிடெட்
த.பெ. எண் 6582, பம்பாய்-400 018

க்ருக்ஸ்
## லாக்டோ-காலமைன் அதுவே எழில் பராமரிப்பு ரகசியம்.

Sista's-DIL-45-P/76/Tam

அறையினுள் பிரவேசித்தபோதுதான், குனிந்த தலை நிமிராமல், முழங்கால்களைத் தன் இரு கைகளாலும் கட்டியவளாய் லாவண்யா உட்கார்ந்திருப்பதை ரமணி கண்டான்.

ஒருசில நிமிடங்கள் அவன் நின்றான். சமையலறையிலிருந்து சத்தம் ஏதும் கேட்கவில்லை. சீதாமணி இல்லை. நிலாவின் டிரான்ஸிஸ்டர் அலறவில்லை. அவளும் இல்லை.

தைரியமாக ரமணி முன்னேறி, லாவண்யா முன் நின்று, ''மிஸ் லாவண்யா!'' என்றான்.

அவள் இயந்திரமாக அவனை ஏறிட்டுப் பார்த்தாள். ''என்ன வேணும்?'' – வார்த்தைகள் இலேசாக ஒலித்தன.

''உன்கூட இரண்டு வார்த்தைகள் பேசலாமா?''

''பேசுங்களேன்.''

''என் அம்மாவை நீ மன்னிக்க வேண்டும்.''

''அவ என்ன குற்றம் பண்ணினா?''

''உன்னை வரவழைச்சு உன்கிட்ட என்னென்னமோ பேசினா!''

''உங்க அம்மா என்னென்னமோன்னு ஒன்றும் பேசவில்லை... நீங்களும் நானும் ராப்பகல் இல்லாம டூயட் பாடறோம்னு அவ தன் மனசிலே கற்பனை பண்ணிண்டு, பாட்டை நிறுத்த என்னைக் கூப்பிட்டனுப்பிச்சா... அவ்வளவுதான்.''

''இதுக்குக் காரணம் நான்தான் மிஸ் லாவண்யா!''

''அது எப்படி?''

''உன்னைப் பத்தி நான் என் அம்மா கிட்டே சொல்லி யிருந்தேன்...''

''என்கிட்டே சொல்லத் தைரியம் வரலியோ?''

''ஆமாம்... நான் உன்னை விடப் பணக்காரன்தான். ஆனால் நீ என்னைவிட எத்தனையோ விஷயங்களிலே ஒசத்தின்னு எனக்குத் தோணிச்சு...''

''பேத்தல்... நீங்கள் ஒரு வக்கீல். ஜெண்டில்மென்னு பேர் வாங்கினவர்... பெரிய பணக்காரர்.... நான் எப்படி ஒசத்தியாக முடியும்?''

''நீ என்னைவிட ஒசத்தின்னு நான் எடை போட்டால் அதை நீ எப்படித் தப்புன்னு சொல்ல முடியும்? அம்மா என் ஆசையைத் தீர்த்து வைப்பாங்கற எண்ணத்திலே நான் அவகிட்ட என் மனசைச் சொன்னேன்.''

''அவ தன் மனசை என்கிட்டே சொன்னா. இப்ப நான் என் மனசை யார்கிட்டே சொல்லுவேன்... உம்... ஆமாம், ஏன் இன்னும் நின்னுண்டே இருக்கேள், உட்காருங்கள்.''

ரமணி தரையில் உட்கார்ந்தான்.

''மிஸ்டர் ரமணி?''

''யெஸ் மிஸ் லாவண்யா!''

''இன்னும் பத்து நிமிஷங்களிலே அம்மா நிலா இன்னும் மத்தவா வந்துடுவா. அதுக்கு முன்னாடி நான் பேசிடறேன்.''

''ஆமாம்.''

''நீங்க உங்க மனசிலே என்னை நெனைச்சுண்டிருக்கேள்னு எனக்கு இலேசாகத் தெரியும். அதை வெளியே சொல்லத் தைரியம் இல்லாமல் தவிக்கிறேள்னும் தெரியும்.''

''தைரியம் வரலேதான். அப்படிச் சொல்றது நாகரிகம் இல்லையோன்னு கூட நான் நினைச்சதுண்டு.''

''உங்க மனசு உடைஞ்சப்புறம் வந்திருக்கேள்... இல்லையா?''

''மனசு உடைஞ்சுதுன்னு நான் சொன்னா அது உன்னை ஏமாத்தற மாதிரி ஆயிடும். ஏன், என்னையே ஏமாத்திக்கிறதும்தான்... ரொம்ப நாளா மனசுக்குள்ளே ஆசைப்பட்டது எனக்குக் கிடைக்கலையேங்கற ஒரு தாபம், ஒரு வருத்தம்... அவ்வளவுதான்.''

''அவ்வளவுதானா?''

''ஆமாம்...வெறும் வருத்தமும் தாபமும் தான் இப்ப என் மனசிலே மிஞ்சி யிருக்குங்கறதாலே நான் பட்ட ஆசை ரொம்ப லேசானதுன்னு சொல்ல முடியாது...''

''புரியறது.''

''நான் படிச்சவன், பணக்காரன், மூணு தலைமுறைக்குச் சொத்து உள்ளவன் எல்லாம் உண்மைதான்... ஆனா, லாவண்யா, உன்னைச் சம்பந்தப்படுத்திப் பேசறப்போ நான் கொம்புத்தேனுக்கு ஆசைப்பட்ட முடவன்தான்... ஏன் தெரியுமா?''

''தெரியாது.''

''உன்னைப் பார்க்கிற போதெல்லாம் ஓர் இனம் புரியாத பயம் என்னுள்ளே தோணும். ஏன் இந்தப் பயம்னு எனக்கே புரியாது... உன்னை நெனைச்சுப் பார்க்கிறப்போ பயம் இருக்காது. ஏன், ஒரு தைரியமும் நம்பிக்கையும் கூட வரும்.''

''ஒருவேளை, இன்னிக்கு உங்க அம்மா என்னை வெளியே துரத்தின மாதிரி, நான் உங்களைத் துரத்திடுவேனோங்கற பயம் உங்க மனசிலே அரிச்சுண்டிருக்கலாம் இல்லியா?''

''இல்லை. அந்தப் பயம் இல்லவே இல்லை. நான் ஒரு கேஸில் தோற்றுப் போயிட்டேன்னு மனசைப் பக்குவப்படுத்திப்பேன்...''

லாவண்யா சிரித்தாள்.

''ஏன் சிரிக்கிறே, லாவண்யா?''

''நான் ஒரு யதார்த்தவாதி. நீங்க ஒரு படி மேலே...''

''இந்தப் பொருத்தம் இருந்தும் நாம் எதிர்த் திசையில் இருக்கிறோம்...''

''ஒரு விதத்துக்கு உங்க அம்மா செய்ததும் நல்லதுக்குத்தான். ஏன்னு கேட்டா, உங்க வாழ்க்கையே, ஐ மீன் கோர்ட் வாழ்க்கையே, பாதிக்கப்பட்டிருக்கும்.''

''அதுவும் உண்மைதான். ராமையாவை விட்டு விட்டுத் தனியாக ஆரம்பிக்க வேண்டியிருந்திருக்கும்.''

''இப்போ அந்தப் பிரச்னை இல்லை!''

''இல்லை.''

''கற்பனையிலே அனுபவிக்கிற சுகத்தை விட யதார்த்தத்திலே படற கஷ்டம் எவ்வளவு மேல்! இல்லியா மிஸ்டர் ரமணி!''

''இருக்கலாம்.... நான் யதார்த்த வாழ்க்கையிலே இன்னும் கஷ்டப்படலே... என் அம்மாவை நீ மன்னிச்சுடு.''

''உங்க மனசிலே நான் என்னை அறியாம ஓர் ஆசையை வளர்த்திட்டேன். அதுக்கு நீங்க என்னை மன்னிச்சுடுங்கோ!''

அம்மா சீதாமணி படியேறி வருவதைப் பார்த்துக் கொண்டே, லாவண்யா, உயிரற்ற குரலில் கூறினாள். (தொடரும்)

புதிய

# உடனடி-உபயோக
# டிக்-20

உடனடியாக மூட்டைப்பூச்சிகளை ஒழிக்கிறது



மண்ணெண்ணெய்
கலப்பதற்கான
மேற்படி செலவு
கிடையாது!




கலக்க வேண்டிய தொல்லை கிடையாது. திறந்து நேராக உபயோகிக்க வேண்டியதுதான். உடனடியாக மூட்டைப் பூச்சிகளை ஒழிக்கிறது. பிளவுகள், பொந்துகள், மெத்தைத் தையற்குழிகள், ஃபர்னிச்சர் ஜாயிண்ட்டுகள், சுவர்களிலுள்ள சட்டங்களின் அடிபாகங்கள் போன்ற பல இடங்களிலும் புதிய டிக்-20 உபயோகியுங்கள்.

புதிய டிக்-20 இப்போது அதிக பாதுகாப்பானது. வீட்டில் வைக்கலாம். காரணம் அது மீண்டும் புதுப்பிக்கப்பட்ட ஃபார்முலா கொண்டதாகும். முன்கூட்டியே மண்ணெண்ணெய் கலக்கப்பட்டு உடனடியாக உபயோகிக்க வசதியாக தயாரிக்கப்பட்டுள்ளது. சர்க்காரின் புதிய நிர்ணயங்கள்படி உள்ளது. உபயோகிப்போரின் பாதுகாப்பை உறுதி செய்கிறது.

**இன்றே டிக்-20**
**வாங்குங்கள்**
**இன்றிரவே நன்றாக**
**உறங்குங்கள்.**


ஒரு ராலிஸ் இந்தியா தயாரிப்பு

RADEUS/R/T-3

மன்னனும் தன் மனைவியின் சிலம்புக்குள் இருப்பது மாணிக்கக் கற்களே என்று கூறியிருந்தால் கண்ணகி தொடுத்த அப்பீல் வழக்கு தோற்றுப் போயிருக்கும். மன்னனுடைய மனைவியின் காற் சிலம்புக்குள் மாணிக்கக் கற்கள் இருக்க முடியாது என்று கண்ணகி நம்பியது எதனால்?

அந்நாளைய தமிழ் மன்னர்கள், ஆடம்பரத்தை வெறுத்து எளிய வாழ்க்கை நடத்தினார்கள். கண்ணகி சந்தித்த பாண்டி வேந்தனும் எளிய வாழ்க்கைக்கு விலக்கானவன் அல்லன். அதனாற்றான், அவனுடைய மனைவியின் காற் சிலம்புக்குள் விலையுயர்ந்த மாணிக்கக் கற்கள் இருக்க முடியாதென்று கண்ணகி நம்பினாள்.

''தென் பாண்டிய நாடு முத்துடைத்து'' என்பது பழமொழி. அன்று மட்டுமல்ல; இன்றும் கூடத்தான். கொற்கைக் கடலிலே மூழ்கி முத்துச் சிப்பிகளை எடுப்பது இன்றும் கூட வளமிக்க தொழிலாக நடந்து வருகிறது. மாணிக்கம் தமிழ் நாட்டுப் பொருள் அல்ல. இறக்குமதியாகும் பொருளாகும். பாண்டி வேந்தன் தன் சொந்த நாட்டின் பொருளான முத்தைப் புறக்கணித்து இறக்குமதியாகும் மாணிக்கத்தைப் பயன்படுத்துபவன் அல்ல என்று கண்ணகி நம்பியிருக்க வேண்டும். மன்னனுடைய சுதேசிப் பற்றைக் கண்ணகி நம்பினாள்.

தன்னுடைய எளிமையையும், சுதேசிப் பற்றையும் கண்ணகி நம்பியதை மெய்ப்பித்து விட்டான், மன்னன். சிலம்பை உடைத்து அதில் உள்ள மாணிக்கப் பரல்களை வெளிப்படுத்திக் காட்டியதோடு கண்ணகியின் அப்பீல் வழக்கு வெற்றி பெற்று விட்டது. கோவலன் கள்வன் அல்லன் என்பதனை அவனுடைய வீர மனைவி மெய்ப்பித்துக் காட்டி விட்டாள்.

இனி, முன்னர் பொற் கொல்லன் கொண்டு வந்தவழக்கின் மீது தான் அளித்த தீர்ப்பை ஆட்சேபித்துக் கண்ணகியாள் தொடுத்த அப்பீல் வழக்கின் மீது மன்னன் தீர்ப்பளிக்கிறான்.




''பொன்செய் கொல்லன் தன் சொல் கேட்ட
யானோ அரசன்? யானே கள்வன்;
மன்பதை காக்கும் தென்புலம் காவல்
என்முதல் பிழைத்தது; கெடுக என்
ஆயுள்!''

இது மன்னன் அளித்த தீர்ப்பு. கோவலனிடமிருந்து தான் கைப்பற்றிய காற்சிலம்பிலிருந்து மாணிக்கப் பரல்கள் வெளிப்படக் கண்டதுமே, மன்னனுடைய கையிலிருந்த செங்கோல் நழுவி விழுந்தது; அதுவரை அவனுக்கு நிழல் கொடுத்துக் கொண்டிருந்த வெண் கொற்றக் குடையானது சாய்ந்து தாழ்ந்தது; உயிர் உடலை விட்டுப் பிரிந்து கொண்டிருந்த நிலையிலேதான் மன்னன் தனது தீர்ப்பைக் கூறினான். தீர்ப்பைச் சொல்லி முடித்ததும் மயக்கம் போட்டு அரியணையிலேயே சாய்ந்து உயிர் விட்டான். அதற்கு முன், அமைச்சர்களைக் கலந்தாலோசியாமல் பொற்கொல்லன் சொல் கேட்ட ''யானோ அரசன்?'' என்ற வினா எழுப்பி, ''யான் அரசனல்லன்'' என்பதைச் சொல்லாமல் சொல்லி விட்டான். அதற்கு மேல், ''யானே கள்வன்'' என்றும் கூறுகின்றான். இதனால், ''கோவலன் கள்வனல்லன்'' என்று கூறி, அவனுக்கு விடுதலை கொடுத்து விட்டான். இதனால், கோவலன் உயிர் பெற்று வந்துவிடவில்லை. என்றாலும், 'கள்வன்' என்ற பழிச் சொல்லிலிருந்து அவனுக்கு

# சிலம்புச் செல்வம்

விடுதலை கிடைத்து விடுகிறதல்லவா? செழியனின் தீர்ப்பு இத்துடன் முடியவில்லை.

''தென்புலன் காவல் என் முதல் பிழைத்தது'' என்றும் சொல்கிறான். அதாவது, 'பாண்டிய அரசர்கள் வழி வழி காத்த மரபை அழித்த முதல் குற்றவாளி யான்' என்கிறான். இதற்குப் பிறகும் தான் உயிர் வாழ்ந்தால் தன்னை உவமை காட்டிக் கொடுங்கோலர்கள் தோன்றி விடுவார்கள் என்று அஞ்சுகின்றது பாண்டியன் நெடுஞ்செழியனின் உள்ளம். தான் உயிர் விடுவதன் மூலம் தன் முன்னோரான செங்கோல் முறை காத்த மன்னர்களின் மரபு தொடரும் என்று நினைக்கிறான். அதனால், ''மன்பதை காக்கும் தென்புலங் காவல் என்முதல் பிழைத்தது; கெடுக என் ஆயுள்!'' என்கிறான். இதுதான் நெடுஞ்செழியன் வழங்கிய தீர்ப்பின் இறுதி வாசகம்.

(தொடரும்)

**(மயிலை இலக்கிய வட்டத்தில் நிகழ்த்திய சொற்பொழிவிலிருந்து)**

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600 031.
Managing Editor: T. Sadasivam. Associate Editor: K. Rajendran.

வாரீர்
புதுமை
தவழ்ந்திட.




பார்த்தறியாப் புதுமை. பரவசக் கிளுகிளுப்பு. லிரில். அலைபெறியும் தளதள பச்சை. அதன் நயமோ குளுகுளு எலுமிச்சை...புதுக் குமரியாய் உங்களைப் பூரித்தெழ வைக்கும்.

**லிரில்**

புத்துணர்வு சோப் **மனம்குளிரும் எலுமிச்சைப் புத்துணர்ச்சி வெள்ளம்.**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

லின்டாஸ்.LR.28-203 TM

